# கல்கி

KALKI 10.7.94 ரூ. 3.00





• ஹரிபாஸ்கர்



• உஷாதேவி

# கசமுசா செய்திகளுக்குக் கவலைப்படாதவர்!

கிண்டி குதிரைப் பந்தய வளாகத்தினுள் - அழகான பசுமைச் சூழலில் அமைந்திருக்கிறது, தலைமைச் செயலாளர் ஹரிபாஸ்கர் பங்களா. விஸ்தாரமான ஹால். தேக்கு மரத்தாலான தரைத்தளம். சுவரில் ராதா - கிருஷ்ணன் தஞ்சாவூர் பெயின்டிங். லட்சுமியை உள்ளடக்கிய வெங்கடாஜலபதியின் பெரிய உருவப் படம். விடாமல் அடிக்கும் தொலைபேசி. மூலையிலிருந்து அலறும் போலீஸ் மைக்.

"வாங்க" என்று சொல்லிக் கொண்டே ஹாலுக்குள் நுழைகிறார் திருமதி உஷா தேவி ஹரிபாஸ்கர். கேரள வாடையோடு தமிழில் பேசுகிறார்.

"தங்கள் அரசின் புதிய தலைமைச் செயலர் பற்றித் தெரிந்து கொள்ள மக்களுக்கு ஆர்வம் இருக்கும். உங்கள் கணவரைப் பற்றிச் சொல்லுங்களேன். அவருடைய அன்றாட பழக்க வழக்கங்கள்...?"

உஷாதேவி உற்சாகமாகப் பேசினார் :

"ஐந்து மணிக்கு எழுந்தவுடனே குளியல். ஒரு மணி நேரம் பூஜை. அப்புறம் பேப்பர் படிப்பு, விஸிட்டர்கள், ஆபீஸ்.

"விஷ்ணு சகஸ்ரநாமம், லலிதா சகஸ்ர நாமம், நாராயணீயம் என்று பலவற்றையும் பாராயணம் பண்ணியிருக்கிறார். கணபதி ஹோமம், நவக்கிரகஹோமம் செய்யக் கூடத் தெரியும் அவருக்கு. எனக்கும் சொல்லிக் கொடுத்திருக்கிறார்."

கைரேகை, ஜோஸியம், ஜாதகம் பார்ப்பதென்றால் மனிதருக்கு ஆர்வம் அதிகமாம். எந்தக் காரணம் கொண்டும் அலுவலக வேலைகளை வீட்டுக்குக் கொண்டு வர மாட்டாராம்!

"என் வயதான மாமியார் படுத்த படுக்கையாக வீட்டில் இருக்கிறார். அவருடன் கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் பின்னர் குறைந்தபட்சம் ஒரு மணி நேரமாவது புத்தகங்களைப் படித்து விட்டுத்தான் தூக்கம். கூடவே டேப்பில் கர்நாடக இசையையும் ரசித்துக் கொண்டிருப்பார்."

எஸ்.எஸ்.எல்.ஸி. வரை குருவாயூரில் படித்த ஹரிபாஸ்கர், பின்னர் இண்டர் படிக்க சென்னை லயோலாவில் சேர்ந்தார். பி.ஏ. (ஹானர்ஸ்) பிரஸிடென்ஸியில் முடித்து விட்டு, சட்டமும் படித்தார். கூடவே சிவில் சர்வீஸ் எழுதி பாஸ் செய்த பின்னர் 23 வது வயதில் ஐ.ஏ.எஸ். நியமனம்.

"1965ல் எங்கள் திருமணம் நடந்த போது, அவர் சேலம் கலெக்டராக இருந்தார். தமிழகத்தில் பல்வேறு போஸ்டிங்குகளில் இருந்து விட்டு மத்திய அரசில் அமைச்சரவைச் செயலராகவும் பணியாற்றியுள்ளார்."

ரேஸ்கோர்ஸின் கஸ்டோடியனாக இருப்பதால் இப்போதிருக்கும் வீடு கிடைத்ததாம்.

ஹரிபாஸ்கர் - உஷாதேவி தம்பதிக்கு ஒரு மகன் - இரண்டு மகள்கள். பையன் அமெரிக்காவில் மேற்படிப்பு படித்துக் கொண்டிருக்கிறார். பெண்களில் ஒருவர் டாக்டர். "என் கணவருக்கு டாக்டர் ஆக வேண்டுமென்றுதான் ஆசை இருந்தது. ஆனால் மாமனார்தான் சிவில் சர்வீஸில் சேர வேண்டுமென்று கட்டாயப்படுத்தி விட்டார். தம்மால் செய்ய முடியாததை மகளாவது செய்யட்டுமே என்று ஒரு மகளை டாக்டருக்குப் படிக்க வைத்தார் அவர்."

"உங்கள் கணவர் தலைமைச் செயலாளர் ஆனவுடன், சில பத்திரிகைகளில் சர்ச்சைக்கிடமான செய்திகள் வந்தனவே!"

"அவருக்குக் கோபம், ஆத்திரம் வருவது ரொம்பக் குறைவு. 'பத்திரிகைகளுக்கு எழுதற உரிமை உண்டு; எழுதிட்டுப் போகட்டுமே. சரியா எழுதறதுதான் நிலைக்கும். தப்புத் தப்பா எழுதினா அந்தப் பத்திரிகையின் மதிப்புத்தான் பாதிக்கப்படும்' என்று சொல்வார்!"

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

படம் : ராஜன்

# ரயில் டிரைவரோடு ஒரு பயணம்!

"ப்ரொஸீட்..."

"எஸ்..."

"காஷன்!"

"எஸ்...." என்ற டிரைவர் கோபால், 105 கி.மீ. வேகத்தில் சென்று கொண்டிருந்த தமது வாகனத்தின் வேகத்தைச் சிறிது குறைக் கிறார்.

"டேஞ்சர்!" - உதவி டிரைவர் வடிவேல் சொல்கிறார்.

"எஸ்... டேஞ்சர்!" என்ற டிரைவர், வேகத்தை முற்றிலுமாகக் குறைத்து, வாக னத்தை நிறுத்தி விடுகிறார். எதிரில் தண்ட வாளங்களில் ஏதோ வேலை நடந்து கொண்டி ருந்ததால் சிவப்பு விளக்கு எரிந்து கொண் டிருந்தது!

ரயில் பெட்டிகளில் ஹாய்யாக உட் கார்ந்து கொண்டு - பெர்த்களில் படுத்துக் கொண்டு அல்லது வாய்ப்புக் கிடைக்கும் போது முதல் வகுப்பு, ஏ.ஸி. என்று குஷாலா கப் பயணம் செய்கிறோமே, அந்த ரயிலை எப்படி ஓட்டுகிறார்கள்?

அவர்களுக்கென்ன? போக்குவரத்து நெரிசல் பற்றிய கவலை இல்லை; ஸ்டியரிங் பிடிக்க வேண்டிய தொந்தரவு இல்லை; குறுக்கே வேறு வாகனங்கள் வருமோ என்கிற பயமும் இல்லை... இந்த நிலையில் ரயில் ஓட்டுவது பெரிய விஷ யமா என்றுதான் அனை வருக்கும் நினைக்கத் தோன்றும்; நாங்களும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தோம்.

ஆனால், பிருந்தாவன் எக்ஸ்பிரஸ் ரயில் எஞ்ஜினில் ஒருமுறை பிரயாணம் செய்த போதுதான், ரயில் ஓட்டுகிற வேலை என்பது, அப்படியொன்றும் தந்த கோபுரத்தில் உட்கார்ந்து கொண்டு செய்கிற வேலை இல்லை என்பது புரிந்தது.

"பிரயாணத்தின் போது, நீங்கள் டிரை வர்களோடு அதிகம் பேசக் கூடாது!" என்று எச்சரிக்கை செய்து, தென்னிந்திய ரயில்வே யின் ஜெனரல் மானேஜர் ராஜ் கே.சுக்லா விடம் அனுமதி வாங்கித் தந்தார் தலைமை பி.ஆர்.ஓ. ஸ்ரீதர்.

அவரது நிபந்தனையை ஒப்புக் கொண்ட பிறகும் நம் மேலுள்ள சந்தேகம் தீரவில்லை ஏ. எம். சௌத்ரி (டி.இ.இ. ஆபரேஷனல்)க்கு. அதனால் எதற்கும் இருக்கட்டுமே என்று முன்பு டிரைவராக இருந்து இப்போது இன்ஸ் பெக்டராகப் பதவியுயர்வு பெற்றிருக்கும் பழனி என்பவரைக் கூடவே அனுப்பி வைத்தார்.

"இத்தனை கெடுபிடிகள் எதற்கு?"

"ரயில் டிரைவர்களின் கவ னம் சிறிது பிசகினாலும் விபத்து ஏற்பட்டு விடும். அவர்கள் ரயில் ஓட்டுகிற போது, எத்தனை கவனமாக மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும் என்பதை நீங்கள் பிரயாணத்தின் போது பார்ப்பீர்கள். இந்த நிலையில், உங்களது பேச்சு அவர்களின் கவனத்தைத் திசைதிருப்பி விட்டால் பிரச்னையாகி விடுமல்லவா! அதற்காகத்தான்!" என்று ஏகப்பட்ட எச்சரிக்கைகளோடு எஞ்ஜின் கேபினில் ஏற்றி விட்டார்கள்.


• பாலகிருஷ்ணன்


• பக்தவத்சலம்


• குப்புசாமி



டிரைவர், உதவி டிரைவர் ஆகிய இருவர் மட்டுமே இருக்கும் அந்தச் சிறிய கேபினில் எங்களோடு சேர்த்து நான்கு பேர். டிரைவர் கோபால் எதையோ ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார்.

''அது என்ன? கந்தசஷ்டி கவசமா?''

''அதைவிடவும் முக்கியமாக நாங்கள் படிக்க வேண்டியது!'' என்று அந்த சார்ட்டைக் கொடுத்தார்.

அதில் எந்தெந்த இடங்களில் தண்டவாளங்களில் வேலை நடக்கிறது; எத்தனையாவது கி.மீ.யிலிருந்து எத்தனையாவது கி.மீ. வரை எவ்வளவு வேகத்தில் ரயிலை ஓட்ட வேண்டும்... என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தது.

''இந்த சார்ட் ஜோலார்ப்பேட்டை வரைக்குமான இன்ஸ்ட்ரக்ஷன்கள் அடங்கியதுதான். ஜோலார்ப்பேட்டையிலிருந்து பெங்களூர் வரைக்குமான சார்ட்டை ஜோலார்ப்பேட்டையில் கொடுப்பார்கள்!''

**ப**ச்சை விளக்கு எரிந்தது. ரயில் மெதுவாகப் புறப்பட ஆரம்பித்தது. உடனே உதவி டிரைவர் வடிவேலு தம்மிடமிருந்த ஒரு சார்ட்டில் 'ரயில் புறப்பட்ட நேரத்தைக் குறித்துக் கொண்டார்.

''இதே போல் வழியில் வருகிற - ரயில் நிற்கிறதோ இல்லையோ - ஒவ்வொரு ஸ்டேஷனையும் கடக்கிற போது உதவி டிரைவர் நேரத்தைக் குறித்துக் கொள்வார். இவரைப் போலவே ரயிலின் பின்பக்கத்தில் கார்டும் குறித்துக் கொள்வார். கடைசியில் இருவர் குறித்த நேரங்களும் ஒத்துப் போகிறதா என்று சரி பார்ப்பார்கள்!'' என்றார் கூட வந்த பழனி.

''சரி, இருவரின் கடிகாரங்களிலும் நேர வித்தியாசம் இருக்காதா?''

''இருக்காது. ரயில் புறப்படுவதற்கு முன்பு, ஸ்டேஷனிலுள்ள கண்ட்ரோல் ரூமிலிருக்கும் ஐஎஸ்டி. படி தமது வாட்சில் நேரத்தைச் சரிசெய்து கொண்டு வருவார் கார்டு. அதை



• புறப்படத் தயாராகும் பிருந்தாவன் எக்ஸ்பிரஸ்

டிரைவர், உதவி டிரைவர் ஆகியோரிடம் காட்டி அவர்களையும் அதன்படி சரிசெய்து கொள்ளச் சொல்லுவார்!''

இந்த நேரத்தில் காது செவிடுபடும்படியாக அவ்வப்போது ஹார்னை அடித்துக் கொண்டிருந்தார் உதவி டிரைவர்.

''சிக்னல்கள்தான் எல்லாம் சரியாக இருக்கும் போல இருக்கிறதே? எதற்காக இப்படி அடிக்கடி ஹார்னை அடித்துக் கொண்டே வருகிறீர்கள்?''

''நாம் இன்னும் சென்னையின் புறநகர்ப் பகுதியைத் தாண்டவில்லை. அதனால் பாருங்கள்... முன்னாலுள்ள தண்டவாளத்தை எத்தனை பேர் சர்வசாதாரணமாகத் தாண்டிக் கொண்டிருக்கிறார்கள் என்று... ரயில் தண்டவாளத்தைத் தாண்டும் போது அடிபடுவதென்பது என்னதான் அவர்களது சொந்தப் பொறுப்பு என்றாலும் அவர்களை நாங்கள்



எச்சரிக்க வேண்டாமா? அதற்காகத்தான் ஹாரன்..." என்றார் அவர்.

இந்த நேரத்தில் எதிரில் உள்ள பச்சை விளக்கைப் பார்த்த உதவி டிரைவர், "ப்ரொஸீட்!" என்றார்.

உடனே "எஸ்!" என்றார் டிரைவர்.

"இருவரும் பக்கம் பக்கமாகத்தான் இருக்கிறீர்கள். நம் அனைவருக்குமே பச்சை விளக்கு எரிவது தெரிகிறது. இந்த நிலையில் அதை உதவி டிரைவர் டிரைவருக்குச் சொல்லுவானேன்? டிரைவருக்கும்தானே பச்சை விளக்கு எரிவது பளிச்சென்று தெரிகிறது?"

"காதால் கேட்பதும் பொய்; கண்ணால் காண்பதும் பொய்; தீர விசாரிப்பதே மெய்' என்று ஒரு பழமொழி இருக்கிறதல்லவா! அதைத்தான் இங்கே செயல்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அதாவது, ஒருவர் பார்வையில் ஏதேனும் தவறு நேர்ந்து விட வாய்ப்புண்டு என்பதால்தான் ஒருவர் சொல்ல, மற்றவரும் அதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிற சிஸ்டம் இது!"

"சரி, இத்தனை எச்சரிக்கையோடு சிக்னல்களைப் பார்த்துத்தான் ரயில் ஓடிக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் இவர்களுக்குப் பச்சைக் கொடி காண்பிக்க வேண்டிய அவசியமென்ன? இவர்களும் பதிலுக்குப் பச்சைக் கொடி காண்பிக்க வேண்டியதும் கட்டாயம் தானா?"

"ஆமாம். என்னதான் சிக்னல்கள் ஆட்டோமாடிக் சிஸ்டத்தில் இயங்கிக் கொண்டிருந்தாலும் அதில் தவறேதும் இல்லை என்பதை யார் உறுதிப்படுத்துவது? ஆங்காங்கே உள்ள ஸ்டேஷன்களில் இருப்பவர்கள்தான் உறுதிப்படுத்த வேண்டும். அப்படி உறுதிப்படுத்துகிற விதத்தில்தான் அவர்கள் பச்சைக் கொடி காட்டுகிறார்கள்; தாங்களும் சிக்னல்களின் எச்சரிக்கைகளுக்கு உட்பட்டுத்தான் ரயிலை ஓட்டுகிறோம் என்பதைக் காட்டத்தான் இவர்களும் பதிலுக்குக் காட்டுகிறார்கள்!"

"ரோடுகளிலெல்லாம் கொஞ்சம் அவசரத்தில் போகிறவர்கள் - சிவப்பு சிக்னலைக் கொஞ்சம் தாண்டிப் போய்க் கூட வாகனங்களை நிறுத்துபவர்கள் - இருக்கிறார்கள். அது போல் ரயில்கள் விஷயத்திலும் நடப்பதுண்டா?"

"நடக்கவே நடக்காது. அப்படிச் சிறிது தூரம் தாண்டிப் போய் ரயிலை நிறுத்தினால் யாருக்குத் தெரியப் போகிறது என்றும் நினைக்கக் கூடாது. ரயில் எந்த இடத்தில் ஓடுகிறது அல்லது நிறுத்தப்படுகிறது என்பது ஸ்டேஷன்களிலுள்ள இன்டிகேட்டரில் தெளிவாகத் தெரியும். எனவே, அப்படி நிறுத்துகிற பட்சத்தில் அந்த டிரைவருக்கு உடனடியாக வேலை போய் விடும். சிக்னலை மீறினால் இங்கு ஒருபோதும் மன்னிப்புக் கிடையாது!"

இதற்குள் ரயில் ஜோலார்ப்பேட்டை ஜங்ஷன் வந்து விட நாங்கள் இறங்கிக் கொண்டோம். அங்குள்ள ரன்னிங் ரூம் (டிரைவர்களின் ஓய்வறை) சென்று அங்கே ஓய்வெடுத்துக் கொண்டும் அடுத்த டூட்டிக்குத் தயாராகிக் கொண்டுமிருந்த சில டிரைவர்களைச் சந்தித்தோம்.

பத்தாவது முடித்து விட்டு இப்போது பிளஸ் ஒன்னில் சேரக் காத்திருக்கும் தமது மகளின் அட்மிஷன் எந்த நிலையில் இருக்கிறதோ என்கிற தவிப்பில் இருந்தார், கடந்த இருபத்தேழு வருடங்களாக டிரைவராயிருக்கும் பாலகிருஷ்ணன்.

"இந்தத் தவிப்பும் டென்ஷனும் நீங்கள் ரயில் ஓட்டுகிற போதும் இருக்குமே?"

"நிச்சயம் இருக்காது. நாங்களெல்லாம் எஞ்ஜின் கேபினில் ஏறி விட்டால், யுத்த களத்தில் இருக்கும் சிப்பாய்கள் மாதிரிதான். மனம் பூராவும் சிக்னல்களில்தான் ஒன்றிப் போகும். வேறு எந்த ஞாபகமும் வராது. மீண்டும் எஞ்ஜினை விட்டு இறங்குகிற போதுதான் வீட்டுக் கவலைகளெல்லாம் வர ஆரம்பிக்கும்!"

"வேறு வேலைகளிலெல்லாம் வேலை முடிந்ததும் வீட்டுக்குப் போய் விடலாம். இதில் அப்படியில்லை. அதே போல் எல்லாப் பண்டிகை நாட்களிலும் விடுமுறை கிடைத்து விடாது. பாருங்களேன்... உங்கள் மகளின் அட்மிஷன் சமயத்தில் கூட உங்களால் வீட்டில் இருக்க முடியவில்லை. இது போன்றதொரு நிலையில் இந்த வேலைக்கு ஏன்தான் வந்தோமோ என்று உங்களுக்குச் சலிப்போ வருத்தமோ ஏற்படுவதேயில்லையா?"

"வருத்தமே இல்லையென்று சொல்லி விட முடியாதுதான். ஆனாலும் என்னைப் போல், மகளுடைய அல்லது மகனுடைய அட்மிஷன் விஷயமாக வெளியூர் செல்லும் அல்லது வேறு சில அவசரக் காரியங்களுக்காகச் செல்பவர்களைப் பத்திரமாகக் கொண்டு சேர்க்கும் பொறுப்பிலிருக்கிறோம் என்பதை நினைத்துக் கொள்கிற போது எனது சொந்த வருத்தமெல்லாம் பறந்து போய் ஒருவித சந்தோஷம் கூட வந்து விடும்!" என்கிறார் பாலகிருஷ்ணன்.

"நான் ஒருமுறை அன்மேன்ட் லெவல் கிராஸிங்கில் ஓர் ஆட்டோ மீது மோதி விட்டேன். நான் என்னதான் ஹாரன்

## அடுத்த இதழில்...

**●● சேஷன் சமாசாரம்: அதிகாரக் குறைப்பு அவசியம்தானா?**
**— ஓர் அலசல்**

**●● ஊழல் சந்நிதிக்கு ஒரு விஸிட்!**



அடித்தும் அந்த ஆட்டோ டிரைவர் காதில் போட்டுக் கொள்ளாமல் குறுக்கே செல்ல, நான் பிரேக் போட்டும் பயனில்லாமல் விபத்து நடந்து விட்டது. ஆட்டோவில் பயணம் செய்த மூவரும் இறந்து போய் விட்டார்கள். மீண்டும் மீண்டும் அந்த இடத்தை நான் கடக்கிறபோதெல்லாம் ஒருகணம் அந்த விபத்தும் அதில் இறந்தவர்களுடைய குடும்பம் பற்றியும் என் நினைவுக்கு வந்து கொண்டேயிருப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. ஆயினும் தவறு என்னுடையதல்ல என்பதால் சமாதானமாகி விடுவேன்!" என்கிறார் ஸ்ரீனிவாசன்.

"தண்டவாளத்தைக் கடந்து செல்பவர்களும் சரி, அன்மேன்ட் லெவல் கிராசிங்கில் வாகனத்தை ஓட்டுபவர்களும் சரி... ரயில்தான் அவ்வளவு தூரத்தில் வருகிறதே, அதற்குள் நாம் கடந்து சென்று விடலாம் என்கிற எண்ணத்தில்தான் இருக்கிறார்களே தவிர - நாங்கள் கொடுக்கும் ஹார்ன் சப்தம் அவர்களை வேகமாகக் கடக்கச் சொல்கிற சப்தம் என்பது போல்தான் எடுத்துக் கொள்கிறார்களே தவிர - ஒரு விபத்தைத் தவிர்க்கிற எச்சரிக்கையாக எடுத்துக் கொள்வதேயில்லை!" என்று வருத்தத்தோடு சொல்கிறார் குப்புசாமி.

"ஒவ்வொரு ரயில் டிரைவரும் டியூட்டிக்குப் புறப்படுமுன், அவர் குடித்திருக்கிறாரா என்று பரிசோதனை செய்து, அவர் குடித்திருக்கவில்லை என்று ஒருவர் உறுதியளித்த பிறகே அவர் ரயில் ஓட்ட அனுமதிக்கப்படுகிறார் என்கிற நிலையில், குடிப் பழக்கமே இல்லாத டிரைவர்களுக்கு இது சங்கடமாக இருப்பதில்லையா?"

"இதிலென்ன சங்கடம்? ஆயிரக்கணக்கான பிரயாணிகளைப் பத்திரமாகக் கொண்டு சேர்க்கும் பொறுப்பை எடுத்துக் கொள்ளுவதற்கான தகுதி அவரிடம் இருக்கிறதா என்பதைப் பரிசோதிப்பதில் எங்களுக்கு ஒரு சங்கடமும் இல்லை!" என்கிறார் பதினான்கு ஆண்டுகளாக உதவி டிரைவராக இருந்து அண்மையில், டிரைவராகப் பதவியுயர்வு பெற்றிருக்கும் பக்தவத்சலம்.

ரயில் டிரைவராகப் பதவியுயர்வு பெறுவது அத்தனை சுலபமானதல்ல. முதலில் உதவி டிரைவர். பிறகு ஷண்டர். அதாவது ரயில்வே ஜங்ஷன்களில் எஞ்ஜின்களைக் கொண்டு வந்து ரயில் பெட்டிகளுடன் இணைப்பது அல்லது பிரித்து எடுத்துச் செல்வது போன்ற வேலை. அதன் பிறகு கூட்ஸ் டிரைவர். அப்புறம் சாதாரண லோக்கல் ரயில் டிரைவர். இறுதியில்தான் எக்ஸ்பிரஸ் ரயிலை ஓட்ட அனுமதிக்கிறார்கள்.

பயணிகள் ரயிலை ஓட்டுவதற்கும் கூட்ஸ் ரயிலை ஓட்டுவதற்கும் ஏதேனும் வித்தியாசம் இருக்கிறதா?

"பொருள்களின் மதிப்பை விட ஆயிரக் கணக்கான பயணிகளுடைய உயிர்களின் மதிப்பு அதிகமல்லவா! அதோடு கூட்ஸ் ரயில்களின் வேகம் அதிக பட்சம் 75 கி.மீ.தான்!"

கடைசியில் நாம் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு (மீண்டும் கூட்ஸ் ரயிலில்) திரும்பும் போது, அவர்கள் நம்மிடம் சொன்ன இரண்டு குறைகள்.

ஒன்று : டிரைவர்களின் சீருடையும் பிளாட்பாரத்தில் காப்பி, டீ போன்றவற்றை விற்பவர்களின் சீருடையும் ஒரே மாதிரி இருப்பதால் பயணிகள் இவர்களையும் 'காபி சாய்' விற்பவர்கள் என்று நினைத்துக் கொண்டு கூப்பிடுகிறார்கள் என்பது.

இன்னொன்று : சில ஓய்வறைகள் அருமையாக இருந்தாலும் சில ஓய்வறைகள் இன்னும் நல்லபடியாகப் பராமரிக்கப்பட வேண்டும் என்பது!

இந்த இரண்டையுமே ரயில்வே நிர்வாகம் நினைத்தால் உடனடியாக நிவர்த்தி செய்து விடலாம். ஒன்றும் பெரிய விஷயமே இல்லை. நம் உயிர்களையே இவர்களிடம் ஒப்படைத்திருக்கும் போது இதைக் கூடச் செய்யாவிட்டால் எப்படி?

**— இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும், படங்களும் : **யோகா**
வண்ணஓவியம்: **மதிகுமார்**

லட்சுமி பார்வதி


இன்னிக்கு புல்லு
கொடுப்பீங்க...
நாளைக்கு சேணத்தை
மாட்டுவீங்க... அப்புறம்
என் முதுகிலே சவாரி
பண்ணிட்டு பட்டுனு
ஓரமா போடுவீங்க...
இது தேவையா எனக்கு...?
மூப்பனார்
காங்கிரஸில்
மீண்டும்
சேர
அழைப்பு


என்-டி-ஆர்


லஞ்சம்
அ.தி.மு.க. அரசின்
மூன்றாண்டு
சாதனைகள்




கல்கி

1994
ஜூலை 10
பவ
ஆனி 26
மலர் : 52
இதழ் : 50




# மூன்றாண்டுச் சாதனைகளும் முழுப்பக்க விளம்பரங்களும்!

நாளிதழ்களைப் புரட்டினால் புரட்சித் தலைவியின் விசுவரூப தரிசனம்! கன்னத்தில் போட்டுக் கொள்ளாத குறைதான்! 'ஜெ' ஆட்சிக்கு வந்து மூன்றாண்டுகள் ஆகி விட்டனவாம். அடுத்தடுத்து நாளிதழ்களில் ஒவ்வொரு அரசு இலாகாவும் தனித்தனியே சாதனை விளம்பரங்கள் தந்து வருகின்றன. இதெல்லாம் புரட்சியல்ல, புரட்டு வேலையே என்பதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

ஏழையோ, பணக்காரனோ இந்த நாட்டின் குடிமகன் ஒவ்வொருவனும் அரசுக்கு வரி செலுத்துகிறான். அதிலும் ஏழைகள்தாம் மிக அதிகமாக மறைமுக வரிகளைச் செலுத்துகிறார்கள். இந்தப் பணத்தையெல்லாம் திரட்டி, மக்களுக்கே பயனாகிற மாதிரி திட்டங்களை வகுத்து, சிக்கனத்தைக் கையாண்டு, அபிவிருத்திப் பணிகளைச் செய்ய வேண்டியது அரசின் கடமை. இப்படி கடமையைச் செய்வதே சாதனையாகி விடாது. சாலைகள் போடுவது, வீடுகள் கட்டித் தருவது, மதிய உணவுத் திட்டம், சுகாதார நிலையங்கள் அமைத்தல் போன்ற பலப்பல மக்கள் நலத் திட்டங்களையும் நிறை வேற்றி வைக்க வேண்டியது அரசின் கடமை. இவற்றுக்கும் மேலே செய்யப்படுகிறதுதான் சாதனை.

சாதனைக்கு ஓர் உதாரணம் வேண்டுமானால் சி. சுப்பிரமணியம் மத்திய அமைச்சராக இருந்த போது விஞ்ஞானி எம். எஸ். சுவாமிநாதனின் ஒத்துழைப்புடன் ஒரு பசுமைப் புரட்சி நடத்தினாரே, அதைச் சொல்லலாம். கப்பல், கப்பலாக உணவு இறக்குமதி செய்து வந்த இந்தியா, வயிற்றைத் தட்டிக் காட்டி அமெரிக்காவிடம் பிச்சை கேட்டு வந்த இந்தியா, உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றதுடன் இன்று ஏற்றுமதி கூடச் செய்கிறது என்றால் அதற்கு சி. எஸ். போட்ட அஸ்திவாரம்தான் காரணம். அது சாதனை!

இன்று தொழில்துறைக்கு இருந்த கட்டுப்பாடுகளை நீக்கி சுதந்திரப் பொருளாதாரத்துக்கு வழிவகுத்திருக்கிறாரே, மன்மோகன்சிங், இது ஒரு சாதனையாக நாளை சரித்திர ஆசிரியர்களால் போற்றப்பட வாய்ப்பிருக்கிறது - அதாவது எல்லாம் நல்லபடியாக முடிந்தால்!

இதைப் போன்ற சாதனைகள் எதையாவது ஜெயலலிதா தமிழகத்தில் செய்து காட்டியிருக்கிறாரா? மின்வெட்டே இல்லை என்ற நிலையை உண்டாக்கினாரா? 'லஞ்ச ஊழல் அடியோடு ஒழிந்தது' என்று நாம் கூறி பெருமைப்பட முடியுமா? அல்லது 'வேலை இல்லாத் திண்டாட்டம் என்ற சொற்றொடருக்கே இங்கு வேலை இல்லாது போயிற்று' என்று மார்தட்ட முடியுமா? வழிப்பறி, கொள்ளை போன்ற ஏதுமின்றி தமிழகம் அமைதிப் பூங்காவாக இருக்கிறது என்று சந்தோஷத்தில் துள்ளவா? அல்லது (நூறு சதம்) எல்லா மக்களுக்கும் கல்வி போதித்து விட்டதாக கர்வப்படத்தான் இயலுமா?

உண்மையில் இதுவரை நடந்திராத சாதனைகள் ஜெ. ஆட்சியில் என்ன நடந்திருக்கிறது என்று பார்த்தால், மலர் தூவி வரவேற்பு, மேடையில் காலில் விழுதல், விசுவரூப கட்-அவுட்கள், ஆயிரம் கார் பவனி போன்றவையே! வரலாறு காணாத வகையில் லஞ்ச ஊழல் மலிந்திருப்பதையும் சட்ட ஒழுங்கு குலைந்திருப்பதையும் இவற்றோடு சேர்த்துக் கொள்ளலாம்! இந்தப் பட்டியலில் சமீப சாதனை, அமைச்சர் வீட்டுத் திருமணத்தில், முதலமைச்சர் எதிர்க் கட்சிகளைச் சாடிய விதமாகும். "வெத்து வேட்டுக்கள்", "வீணர்கள் கூட்டம்", "கிணற்றுத் தவளைகள்", "அரிக்கை அரசியல்வாதிகள்" என்றெல்லாம் இவர் இழித்துரைத்திருப்பது போல் கடந்த காலத்தில் வேறு எந்த முதல்வரும் இவ்வளவு தரக் குறைவாகப் பேசியிருக்கவே முடியாது! இதையெல்லாம் தூக்கி அடிக்கிற சாதனை, இல்லாத சாதனைகளை இருப்பது போல் காட்டி முழுப் பக்க விளம்பரங்கள் மூலம் மக்களின் வரிப்பணத்தை வீணடிப்பதாகும்.

ஒரே ஒரு ஆறுதல், ஆண்டுக்கு ஒருமுறை சகோதர தினசரிகள் பலவற்றுக்கு அரசுத் தயவில் பிரும்மாண்ட விளம்பரங்களும் அதற்கேற்ப கணிசமான வருவாயும் கிடைக்கிறதே என்பதுதான்!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.



# தலைமறைவாகியிருக்கும் தஸ்லிமா நஸ்ரீன்!

ஒரே ஒரு நாவல்தான் எழுதினார் நஸ்ரீன். தலைக்கே ஆபத்து வந்து விட்டது! நாவல் - 'லஜ்ஜா'. வெட்கம்.

பாப்ரி மசூதி இடிக்கப்பட்ட பிறகு, பங்களாதேஷில் நடந்த பாதிப்புகளின் போது, இந்துக்களை அங்கே இருந்த பெரும்பான்மை சமூகத்தினர் எப்படித் தாக்கினார்கள் என்ற விஷயம்தான் நாவலின் மையக் கருத்து.

டாக்டருக்குப் படித்து விட்டு, அனஸ்தடிஸ்ட்டாகத் தொழில் செய்து வந்தவர் தஸ்லிமா நஸ்ரீன். பெண்கள் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை, குறிப்பாகத் தமது சமுதாயத்தைச் சேர்ந்த பெண்கள் எப்படி நடத்தப்படுகிறார்கள் என்ற கொடுமைகளை அவ்வப்போது எழுதி வந்தவர்.

'லஜ்ஜா' நாவலை வெளியிடுவதற்கு முன்பாகவே முஸ்லிம் அடிப்படைவாதிகளின் வெறுப்பைச் சம்பாதித்திருந்தார். நாவல் வெளிவந்ததோ இல்லையோ, அவர் மீது தாக்குதல்கள் தொடங்கின. அவரைக் கொலை செய்பவருக்குப் பரிசுகள் அறிவிக்கப்பட்டன. அரசு அவரது ஃப்ளாட்டுக்கு வெளியே இரண்டு போலீஸ்காரர்களைப் பாதுகாப்புக்கு அளித்தது.

உள்ளே பயந்து போய் உட்கார்ந்து, சிகரெட்டைக் கொளுத்திப் புகையை விட்டுக் கொண்டு, யாரேனும் கதவைத் தட்டினால் மெல்லத் திறந்து நண்பர்தானா என்று உறுதி செய்து கொண்டு, வீட்டுக்குள்ளேயே சிறை வைக்கப்பட்டவர் போல் வாழ்ந்து வந்தார் தஸ்லிமா. மூன்று முறை விவாகரத்துச் செய்தவர்.

'லஜ்ஜா'வோடு விஷயம் முடியவில்லை.

'ஸ்டேட்ஸ்மென்' நாளிதழில் ஒரு பேட்டி கொடுத்தார். குரானை மாற்றி எழுத வேண்டும் என்று பேட்டியில் அவர் சொன்னதாக வெளியாயிற்று. ('நான் அப்படிச் சொல்லவில்லை. என் பேச்சைத் தவறாக வெளியிட்டிருக்கிறார்கள்' என்று பிறகு தஸ்லிமா கண்ணீர் விட்டுக் கொண்டு மறுத்தும், யாரும் அவர் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.)

போதாக்குறைக்கு,'ஸ்டேட்ஸ்மன்' ஆசிரியர் எஸ். ஆர். இரானி, 'காலங் காலமாக மதத்தின் பெயரால் இழைக்கப்படும் கொடுமைகளை தஸ்லிமாவைப் போல யாரேனும் ஒருவர் வெளிப்படையாகச் சொன்னால்தானே நல்லது?' என்று தூண்டி விடுகிற மாதிரி மறு நாள் எழுதி வைத்தார். அவருக்கென்ன போயிற்று!

இஸ்லாம் மதத்தைக் குறைகூறியதற்காக, தஸ்லிமாவுக்குத் தகுந்த தண்டனை தரப்பட வேண்டும் என்று பயங்கரக் கூக்குரல் எழுந்தது பங்களாதேஷ் முழுதும்.

தலைமறைவானார் தஸ்லிமா. கடைசியாக ஆஸ்திரேலிய வானொலிக்குப் பேட்டி கொடுத்திருக்கிறார்.

அவரை ஆதரித்து எழுதிய 'ஜனகதா', 'ஆஜ்கர் காகஜ்', 'பங்ளார் பானி' முதலிய இதழ்களின் அலுவலகங்கள் தாக்குதலுக்கு உள்ளாயின.

அறுபதாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகி விட்ட 'லஜ்ஜா'வைத் தவிர, பல டாக்கா நாளிதழ்களில் அவர் எழுதி வந்த 'நிர்பச்சித' கட்டுரைகளின் தொகுப்புக்கு ஆனந்த புரஸ்கார் வழங்கியது கல்கத்தா நிறுவனம் ஒன்று. அப்போது அவர் துளியும் பயமின்றி பழமைவாதப் போக்குகளைச் சாடிப் பேசியதை, தலைமை வகித்த வங்க நாவலாசிரியர் புத்ததேவ்குஹா பாராட்டினார். 'லஜ்ஜா' முதன் முதலில் வெளியான போது நூலை, புத்ததேவ்குஹாவுக்கு சமர்ப்பணம் செய்தார் தஸ்லிமா. "முதன் முதலில் நான் எழுதிய போது வெகுவாகக் கோபமடைந்து, உணர்ச்சி வசப்பட்டு எழுதினேன். இப்போது வெளியாகியிருக்கும் திருத்தப்பட்ட பதிப்பை கல்கத்தாவிலுள்ள ஆனந்தா பப்ளிஷர்ஸ் கொண்டு வந்திருக்கிறார்கள்!" என்கிறார் தஸ்லிமா.

"நான் எழுதியது இந்த ஒரு நாவல்தான். ஆனால் என் பெயரில் சுமார் 15 நாவல்கள் இன்றைக்கு மார்க்கெட்டில் கிடைக்கிறது!" என்று கிண்டலடிக்கிறார்.

சல்மான் ருஷ்டியைச் சந்திக்க லண்டன் செல்லும் திட்டம் இருக்கிறது தஸ்லிமாவுக்கு. அவர் தஸ்லிமாவின் நிலையை ஆதரித்திருக்கிறார்.

"என்னுடைய அடுத்த புத்தகமாக 'குரானில் பெண்கள்' என்ற தலைப்பில் எழுதிக் கொண்டிருக்கிறேன்" என்கிறார். அது இன்னும் எத்தனை சர்ச்சைகளைக் கிளப்பப் போகிறதோ!

- சாருகேசி

Suresh

# Kalki Shopping Page

## ஏஜெண்டுகள் தேவை

1995 ஆம் வருடத்திய படக் காலண்டர்கள், மாதாந்திர காலண்டர்கள், தினசரிக் காலண்டர்கள், கீ செயின்கள், டைரிகள், ஸ்டிக்கர்கள், ஆர்டர் புக் செய்ய பேச்சுத் திறமைமிக்க ஏஜெண்டுகள் தேவை. கூடுதல் கமிஷன், கவர்ச்சிகரமான போனஸ். எழுதுக.

TEL : "PEEFA" போன் : 22550

**பிரின்ஸ் ஃபைன் ஆர்ட்,**
11-C, P. S. R. ரோடு,
சிவகாசி - 626 123.

---

உயர்ரக சுங்குடி
புடவைகள்
ராணி சாரீஸ்
இந்த துணி லேபிலை
கவனித்து வாங்குங்கள்

**RANI SAREES**
**MADURAI - 12**
**R.A.M**

**மதுரை**
**டெக்ஸ் டைல்ஸ்**
2.சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டிபஜார்,
சென்னை-17.
(பிரில்லியண்ட் டுடோரியல் அருகில்)

---



## ASTROLOGER

*HER PREDICTIONS HELP*

How would Smt. Meenakshi Alagappan read your horoscope? Her analysis doesn't just describe you, it shgows you how to value and cherish the person you are. She uses here experience to unearth the hidden you : your strengths, weaknesses and the forces behind what you think and do. In short she will tell you about.

• Your basic psychological type • The characters in your inner drama • The psychological climate of your childhood • Your typical relationship patterns • Your path towards becoming whole

Explore Astrology on a Computer New techniques make this analysis read much like an individual consultation and attain the highest expression of you. Casting of horoscope for Indian & foreign birth also undertaken.

Details required : Name, Father's Name, Date, Time and Place of Birth.

Astro-Numero Computer Software also available for sale & service.

*For further details contact :*

**ANK Swamy Educational Trust HEREDITARY ASTROLOGER**
**Smt. MEENAKSHI ALAGAPPAN M.Com.**

D/o. Nadi Jothida Chakravarthi A.N.K. Swamy
Residence : Vinayaga Nagar, 83, Kutchery Road, Mylapore, Madras - 4.
Office : 16/B, Picnic Plaza (Luz), 2, Ramakrishna Mutt Road,
Mylapore, Madras - 4. Tel : 76480

*The Astrologer will be attending a conference organized by AFA, California, USA from 26th June to 1, July 1994. She will be available for consul tation from November '94. Phone : 4940580*

# Kalki Shopping Page

மதுரை சுங்குடிப்
புடைவைகள் மலிவான
விலையில் வாங்கச்
சிறந்த இடம்

**காஞ்சிபுரம்**
**சொசைட்டி ஹவுஸ்**
1, வடக்கு மாட வீதி,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004.

6 கெஜம் முதல்
9 கெஜம் வரை
கிடைக்கும்.

## BESTDOORS

**Which is the BESTDOOR?**

BESTDOOR *is one which is resistant to Fire, Acid & Alkali and is unaffected by oxidation and rusting.*

Our BESTDOORS (Reinforced Fibre Glass Plastic Door) satisfies these requirements.

A product of
**QUALITY DECOR**
2, Velacherry Road,
Little Mount, Madras- 15
PHONE 2351986



## திருமண பட்டு

மற்றும்

**மில் ஜவுளி ரகங்களுக்கு**
**கைராசியான ஸ்தாபனம்**

## ஸ்ரீ வினோத்

கிளாத் சென்டர்
801, பெரியகடை வீதி,
கோயமுத்தூர் - 641 001
போன் : **Off: 30309**
**32131**
**Resi: 213241**

# “சென்சாரை நம்பிப் பயனில்லை!”

●● “சென்சாரை நம்பிப் பலன் இல்லை. சினிமாவில் ஆபாசங்களை ஒழிப்பதற்கு, நான் ஒரு புது திட்டம் வைத்திருக்கிறேன்! இந்திப் படங்களில் நடிக்கும் கதாநாயகிகளின் பெற்றோர்களை அழைக்கப் போகிறேன். அவர்களை ஒன்றாக உட்கார வைத்து, 'உங்கள் மகளை இம்மாதிரியான ஆபாசக் காட்சிகளில் நடிக்க விடாதீர்கள்' என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன்! இந்தவிதத்தில் நான் முதலாவதாகச் சந்திக்க இருப்பது, ரந்தீர் கபூரையும் அவரது மனைவியையும். 'அந்தப் பெண் கரிஷ்மா கபூர் 'ஆட்டத்தை உடனே நிறுத்தச் சொல்லுங்கள்' என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன்!”

இப்படிப் பேசியது யார் தெரியுமா? முன்னாள் மத்திய அமைச்சர் கிரிஜாவியாஸ்தான். மைசூரில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் இப்படிப் பேசினார். நடக்கிற காரியம்தானா?

●● பெங்களூர் நகரின் புறநகர்ப் பகுதிகளில் புதிதாக வீடு கட்டிக் கொண்டு குடியேறுபவர்கள் கொள்ளையர்களிடமிருந்து தப்பிக்க வேண்டுமானால் சொந்தமாகத் துப்பாக்கி வைத்துக் கொள்ளலாம் என்றும் அவர்களுக்குக் கால தாமதம் செய்யாமல் உடனடியாக லைசென்ஸ் வழங்குவோம் என்றும் அறிவித்தார், போலீஸ் கமிஷனர் கோதண்டராமய்யா. “அறிவிப்புக்குப் பின் நீண்ட நாட்கள் ஆகியும் லைசென்ஸ் கேட்டுப் போதுமான மனுக்கள் வராதது ஆச்சரியமாக இருக்கிறது” என்கிறார் அவர். “போலீசுக்கென்ன சுலபமாய்ச் சொல்லி விட்டார்கள். துப்பாக்கிகளின் விலை என்ன தெரியுமா... நடுத்தர குடும்பங்கள் அவ்வளவு தொகை கொடுத்துத் துப்பாக்கி வாங்கி வைத்துக் கொள்ள முடியுமா என்ன?” என்கிறார் பொதுஜனம்.

துப்பாக்கி விலை ரூ. 10,000 முதல் ரூபாய் ஒரு லட்சம் வரை என்பது ஒரு புறமிருக்க, துப்பாக்கி தோட்டா விலையே ஐம்பது பைசாவிலிருந்து ரூ.20க்கு உயர்ந்து விட்டதே!




●● ஓர் ஆட்டோ டிரைவர் மர்மமான முறையில் இறந்து கிடந்ததற்குக் கண்டனம் தெரிவிக்கும் விதமாகக் கோட்டயத்திலுள்ள மற்ற ஆட்டோ டிரைவர்கள், கடைகளை அடைக்கும்படி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். அடைக்க மறுத்த கடைக்காரர்களை மிரட்டிப் பணிய வைத்தார்கள். சும்மா விட்டதா கோட்டயத்திலுள்ள வியாபாரிகள் சங்கம்? 'கடையைத் திறப்பதும் மூடுவதும் எங்கள் உரிமை. எங்களை ஹர்த்தால் செய்யும்படி வற்புறுத்த யாருக்கும் உரிமையில்லை; எனவே, நடந்த கடையடைப்புக்கு நஷ்டஈடு வேண்டும்?' என்று போராட்டத்தில் குதித்திருக்கிறது! வாலு போச்சு கத்தி வந்தது கதையாக, ஆர்ப்பாட்டத்தைத் தொடர்ந்து போராட்டம்!




●● அண்மையில் தமிழ்நாட்டில் குற்றாலீசுவரனின் நீச்சல் சாதனையைக் கண்டோம். மேற்கு வங்கத்திலும் ஒரு சாதனையாளன் தோன்றியிருக்கிறான். அவன் பெயர் தனுஜித்தாஸ். ஹூக்ளி ஆற்றில் தொடர்ந்து பத்து கிலோ மீட்டர் நீந்தியிருக்கிறான். இதில் என்ன சாதனை என்று கேட்கிறீர்களா? தனுஜித்தின் வயது மூன்றரை! மற்றொரு சாதனை படைத்துள்ளவர் மேற்கு

வங்க முதல்வர் ஜோதிபாசு. அவர் முதல்வர் பதவியேற்றுப் பதினேழு ஆண்டுகள் நிறைவு பெற்றுள்ளன. இந்தியாவில் வேறெந்த முதல்வரும் இவ்வளவு நீண்ட காலம் பதவி வகித்ததில்லை. ஓர் உலக சாதனையாகவுமிருக்கலாம்?

●● 'ஊர்வல நகரம்' எனப் பெயர் பெற்ற கல்கத்தாவின் ஹௌரா பகுதியில் சமீபத்தில் நடைபெற்ற ஓர் ஊர்வலம் அதிசயமானது. காரணம், அதை நடத்தியவர்கள் அரசியல் சார்பற்றவர்கள். அவர்கள் முழக்கிய கோஷங்கள்: "தேர்தல் ஒழுங்கீனங்கள் ஒழிக!" "சேஷன் வாழ்க!"

●● மேற்கு வங்கத்திலுள்ள மத்யம்கிராம் என்ற ஊரில் எல்க் என்ற நிறுவனம் மாங்காய் ஊறுகாய் தயாரித்து வருகிறது. ஆண்டுதோறும் 7200 பாட்டில்கள் பக்கிங்ஹாம் அரண்மனைக்கு அனுப்பப்படுகின்றன, கடந்த 35 ஆண்டுகளாக! பிரிட்டிஷ் ராணி உபயோகிக்கும் உணவுப் பண்டங்களின் தூய்மையையும் தரத்தையும் பரிசோதிக்கும் பொறுப்பு லாயிட்ஸ் என்ற நிறுவனத்துக்கு அளிக்கப்பட்டுள்ளது. இந்த நிறுவனத்தின் பிரதிநிதிகள் ஆண்டுக்கு ஒருமுறை மத்யம்கிராம் வந்து மாங்காய் ஊறுகாய்த் தொழிற்சாலையைப் பார்வையிட்டு, அதில் தயாராகும் பொருள்களின் தூய்மை, தரம் பற்றி நற்சான்று அளித்த பிறகே இந்த மாங்காய்




மொரப்பா பக்கிங்ஹாம் அரண்மனைக்கு அனுப்பப்படுகிறது.

●● மேற்கு வங்க அரசு சிறை நிர்வாகத்தில் பல சீர்திருத்தங்கள் கொணரத் திட்டமிட்டுள்ளது. இத் திட்டத்தின் ஒரு பகுதி, திறந்தவெளிச் சிறைகள். கொலை போன்ற கடுங்குற்றங்கள் செய்யாத கைதிகள் இந்தச் சிறைகளில் தங்கள் குடும்பங்களுடன் வசிக்கலாம். அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தினருக்கும் கல்வி, மருத்துவம் பொழுதுபோக்கு வசதிகள் அளிக்கப்படும். அதெல்லாம் சரிதான். குற்றமெதுவும் செய்யாத ஏழைப் பொது மக்களுக்கு இந்த வசதிகளெல்லாம் எப்போது கிடைக்கும்?

பெங்களூரிலிருந்து : **பெர்னாண்டஸ்**
கல்கத்தாவிலிருந்து : **சு. கிருஷ்ணமூர்த்தி**
திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ்.மணி**












## நீங்கள் கேட்டவை - தராசு

# என்.டி.ஆரின் மனைவி அரசியல் பிரச்னை இல்லையா?

● நாகவள்ளி லோகநாதன், பரமத்திவேலூர்.

*? "ஓய்வு பெற்ற பின் என்ன செய்வேன் என்று கேட்கிறார்கள். வீட்டின் பின்புறம் பெரிய குழி வெட்டுவேன். பக்கத்திலேயே இன்னொரு குழி வெட்டி இந்த மண்ணை அதில் போட்டு நிரப்புவேன்" என்கிறாரே, சேஷன்?*

! உடற்பயிற்சி எல்லோருக்கும் தேவைதான்; அவருக்கு ரொம்ப அவசியம் தான்.

• சாதனை!



● கோவி. இரவிசந்திரன், கடலூர் துறைமுகம்.

*? கோட்டையாக இருந்த ஜனதாதளம் உடைந்தது பற்றி?*

! என்னிக்குங்க அது கோட்டையா இருந்துச்சு? நெல்லிக்காய் மூட்டை அவிழ்ந்தது; காய்கள் உருண்டன; அவ்வளவுதான்!

● வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.

*? விம்பிள்டன் போட்டியில் ஸ்டெஃபி கிராஃப் தோல்வி குறித்து...?*

! எல்லாரும் மார்ட்டினா மாதிரி சாதனை படைக்க முடியாதுங்க. பாருங்க, கடைசியா கலந்துக்கற இந்த விம்பிள்டனிலே கூட செமி ஃபைனல் வரை வந்துட்டாங்க!

● எல்.எம். அபிதாட்சயா, மதுரை - 16.

*? சம்பளமே இல்லை என்றால் போலீஸ் பணிக்கு ஆட்கள் வருவார்களா?*

! ஓ! இன்றையச் சூழ்நிலையில் ஓ.யெஸ்!

• தேகப் பயிற்சி!



• பொன் விழா ஆண்டு



● எஸ். குமார், காரைக்குடி.

*? ஆளும் கட்சி நடத்தும் பந்த்துக்கும் எதிர்க் கட்சிகள் நடத்தும் பந்த்துக்கும் என்ன வித்தியாசம்?*

! ஆளுங்கட்சி பந்த்தில் போலீஸே கடையை மூடச் சொல்லும். எதிர்க்கட்சி பந்த்தில் திறந்து வைக்கச் சொல்லி பாதுகாப்புக் கொடுக்கும்!

● நா. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? அடிக்கடி நடத்தப்படும் பந்த்தினால் யாருக்கு லாபம்?*

! வீடியோ லைப்ரரிகாரர்களுக்கு!

● மொ. சையத் அப்துல்காதர், தக்கோலம்.

*? குஜராத்தில் பல பெண்களை மான பங்கப்படுத்தியதாக ஒரு சாமியார் கைதாகியிருக்கிறாரே? இன்னுமா மூட நம்பிக்கை?*

! மெக்காவுக்கு அழைத்துப் போவதாகச் சொல்லி பலரை ஏமாற்றி விட்டார் ஒருவர். அதனால் ஹஜ் யாத்திரையே வேண்டாம் என்று சொல்லி விடுவதா? போலீஸ் நிலையத்தில் கற்பழிப்பு நிகழ்ந்ததாகச் செய்தி. போலீஸ் துறையே வேண்டாம் என்று கூறி விடுவதா? நம்பிக்கையில்தான் உலகமே சுழல்கிறது. சில சமயங்களில் அது மூடத்தனமாக மாறி விடுவதால் நம்பிக்கை இழக்கக் கூடாது.

• சாதனை?



● வி. சிவா, மதுரை - 16.

*? கால்பந்தாட்ட ஜுரம் உங்களை எந்த அளவுக்குப் பாதித்துள்ளது?*

! அலாரம் வைத்துக் கொண்டு நள்ளிரவில் எழுந்து, ஃபிளாஸ்கில் டீ போட்டு வைத்துக் கொண்டு சாப்பிட்டு, தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு டீவி பார்க்கும் அளவுக்கு அல்ல.

● பழ. நாகப்பன், சென்னை.

*? நீர் பார்த்து ரசித்த சமீபத்திய திரைப் படம்?*

! வாரப் பத்திரிகைகள் படிக்கும் ஒவ்வொருவருக்கும் தெரிந்திருக்கும் பெயர் கோபுலு. அவர் பத்திரிகை உலகில் பிரவேசித்து இன்று பொன் விழா ஆண்டு. இன்னும் பல தங்கமான ஆண்டுகளைக் காண வாழ்த்துவதோடு நில்லாது, அவரைப் பற்றிய ஒரு டாகுமெண்டரி தயாரித்துள்ளது "ஆட்வேவ்" நிறுவனம். உருப்படியான காரியம் என்பது மட்டுமல்ல; முதல் தரமான தயாரிப்பும் கூட. அரசியல் கார்ட்டூன்களின் குத்தல், ஜோக்குகளில் ஜொலிக்கும் ஹாஸ்யம், சரித்திர நிகழ்ச்சிச் சித்திரங்களின் கம்பீரம், தெய்வீகப் படங்களின் ஆன்மிக உணர்வு, பெண் சித்திரங்களின் நளினம், கதைச் சித்திரங்களின் உயிரோட்டம், எல்லாவற்றுக்கும் மேல் கோபுலு என்ற மாமனிதனின் மென்மையான இதயம் முதலிய எல்லாவற்றையும் அற்புதமாகப் படம்

பிடித்திருக்கிறார் இயக்குனர் யாகூப். ஒலி, ஒளிப் பதிவுகள், கமெண்டரி, பின்னணி இசை முதலிய எல்லாமே டாப். சென்னை தூர்தர்ஷன் அதைக் கொத்திக் கொண்டு போய் ஒளி பரப்பினால் லட்சோபலட்சம் வாரப் பத்திரிகை வாசகர்கள் மகிழ்வார்கள். நடராஜன் ஸார்! சொல்லிட்டேன். அப்புறம் உங்க இஷ்டம்!

● இரா. சக்திவேல், பரமத்திவேலூர்.

*? பிரதமரின் மூன்றாண்டுகால சாதனை; முதல்வரின் மூன்றாண்டு கால சாதனை - ஒப்பிடுக!*

! பதவி ஏற்றபோது மைனாரிடி அரசாக இருந்ததை, தற்போது ஸ்திரமான அரசாக விளங்குமளவுக்குப் புதிய நண்பர்களைச் சம்பாதித்துக் கொண்டு, அமைதியாகக் காரியங்களைச் செய்துகொண்டு போகிறார் பிரதமர். அபரிமித மெஜாரிட்டி பெற்று, 'தாட்பூட்' அரசியல் நடத்தி, நண்பர்களை ஒருவர் பின் ஒருவராக இழந்து கொண்டு வருகிறார் முதல்வர்.

● ஐ.எஸ். வாசு, மாடம் பிள்ளைதர்மம்.

*? "சிறந்த முறையில் சுத்தமாகப் பராமரிக்கப்படும் அரசு மருத்துவமனைக்குப் பரிசு" என்று அமைச்சர் முத்துசாமி அறிவித்துள்ளாரே?*

! திரைப்படங்களுக்கு மான்யம் கொடுத்த கதையாக இதையும் தகுதி



• அரசியல் இல்லையா?



• குதித்தார்; தாவினார்!



• கடைசி வெற்றி?



• தோல்வி

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
**கண்ணம்மா ராமசாமி,**
**ஏ/284, 3ம் குறுக்குத் தெரு,**
**பெரியார் சாலை, தீரன் நகர்,**
**திருச்சி - 620 009.**

இருக்கோ இல்லையோ அள்ளிக் கொடுத்துக் கொண்டு போகாமல் இருந்தால் சரி!

● பி.ஆர். மணி, சென்னை.

*? ஜப்பான் போல இந்தியா ஒரு தொழில் திறமையுள்ள நாடாக உருவாக வாய்ப்பிருக்கிறதா?*

! வாய்ப்பு நிறையவே இருக்கிறது. அதற்கேற்ப பரந்த மனப்பான்மையும், ஒத்துழைக்கும் சுபாவமும், உழைப்பார்வமும் இல்லாதது தான் குறை.

● கண்ணம்மா ராமசாமி, திருச்சி. ❑

*? இட ஒதுக்கீடு பிரச்னையில் கைதாகி போலீஸ் வாகனத்தில் ஏறும்போது, ஏதோ கல்யாண வைபவத்தில் கலந்து கொள்ளச் செல்வது போல் சிரித்த முகத்துடன் தலைவர்கள் போஸ் கொடுக்கிறார்களே?*

! இந்தப் பிரச்னைதான் என்றில்லை, எந்தப் போராட்டமானாலும் அரசியல் தலைவர்களுக்கு அது மேலும் பிரபலமடைய உதவும் ஒரு திருவிழா மாதிரிதான். அதில் துக்கம் ஏது?

● ப. இராம்முருகன், சிவகங்கை.

*? "என்னுடைய இரண்டாவது மனைவியை அரசியல் பிரச்னையாக்காதீர்கள்" என்று பத்திரிகைகளுக்கு என்.டி.ஆர். அறிக்கை விட்டுள்ளது பற்றி...?*

! பிரச்னைக்கு உள்ளாகாத வகையில் லட்சுமி பார்வதி நடந்து கொண்டால் பிரச்னையே யில்லை. ஆனால் ரேணுகா சீறிப் பாய்வதற்கு அவர் இடமளித்து விட்ட பிறகு, ரேணுகா மன்னிப்புக் கோராததால் அவரை என்.டி.ஆர். கட்சியிலிருந்து வெளியேற்றிய பிறகு; என்.டி. ஆரின் மாப்பிள்ளை வேறு ரேணுகாவை ஊக்குவித்துக் கொண்டிருக்கும் நிலையில், என்.டி.ஆரின் வேண்டுகோள் சாரமற்ற சினிமா டயலாக்! சப்!

● எல். மீனாட்சி சுந்தரம், மதுரை.

*? அரசியலில் நுழையும்போது "குதிக்கிறோம்" என்ற பொருளில் செய்தி வருவது ஏன்?*

! எதிர்காலத்தை நன்கு திட்டமிட்டுச் செயல்படுகிறவர்கள் இறங்குகிறார்கள்; அப்படி திட்டமிடாதவர்கள் குதிக்கிறார்கள். அப்புறம் நாற்றம் சகியாமல் குட்டைக்குக் குட்டை தாவுகிறார்கள்! சிவாஜி போல ஏமாற்றம் அடைகிறார்கள்!

# பரிசு ரூ. 250!

## இந்தப் பிரபலங்களைக் கண்டுபிடியுங்கள்!



2



1

1.............................

2.............................

3.............................

4.............................

5.............................



3



4



5

இங்குள்ள ஐந்து படங்களும் இன்றைய பிரபலங்களின் பால்ய காலப் படங்கள். இவர்கள் யார் என்பதை மேலுள்ள கூப்பனில் சரியாக வரிசைப்படுத்தி எழுதுபவருக்குப் பரிசு ரூ. 250/-. ஒருவருக்கு மேல் எழுதினால் குலுக்கல் முறையில் பரிசு.

எடுங்கள் பேனாவை; காட்டுங்கள் உங்கள் சாமர்த்தியத்தை!

உறையின் மேல் **'பிரபலங்களைக் கண்டு பிடியுங்கள்'** என்று குறிப்பிட்டு இந்தப் பக்கத்தை அப்படியே கத்திரித்து அனுப்புங்கள்.

**முடிவு தேதி : 15.7.94.**

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

என் பெயர் : ..........

..............................

விலாசம் : ..............

..............................

..............................

..............................

..............................

# மணிக்கொடி

## 1

பெரியப்பா இல்லாத வாசற்பக்கம் வெறிச்சோடிக் கிடந்தது. தமது சாய்வு நாற்காலியில் ஒரு சிங்கம் மாதிரி அவர் உட்கார்ந்திருப்பது வழக்கம். கம்பீரம் அவரது முழுத் தோற்றத்திலும் அகன்ற கண்களிலும் குடி கொண்டிருந்தது. அகலமான சதுர முகம். தடிமனான புருவங்கள். ஒரு புருவம் சற்று ஏற்றமாக இருக்கும். தீவிரமாக எது குறித்தாவது அவர் பேசுகையில் அந்தப் புருவம் மேலும் ஏற்றம் கொண்டு அவரது முகத்துக்கு ஒரு தனிக்களையைத் தரும். சற்றே மேடிட்ட அகலமான நெற்றி. எப்போதும் அதில் ஒரு சந்தனப் பொட்டு.

காலியாக இருந்த அந்த நாற்காலியைப் பார்த்த போது, மனத்தை என்னவோ செய்தது. பெரியப்பா தலைவலி, கால்வலி என்று சொன்னதே இல்லை. இப்போது அவர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு இரண்டு நாட்கள் ஆகி விட்டன என்பதை ஏற்கவே முடியவில்லை. ஒருவேளை இது அவருக்கு இறுதி வேளையாக இருக்குமோ? கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை.

"கிட்டு!"

அம்மாவின் அழைப்பால் எண்ணங்கள் கலைந்து, தலை உயர்த்திப் பார்த்தேன். மருத்துவ விடுதியிலிருந்து திரும்பி இருந்த அம்மா, கால் செருப்புகளை உதறியபடி, "உன்னைப் பெரியப்பா வரச் சொன்னார். உடனே போ," என்றார்.

எனது நெஞ்சு அடித்துக் கொண்டது எனக்கே கேட்கிற மாதிரி ஆயிற்று.

"ஏம்மா? விபரீதமா ஏதாவதா?"

"நல்ல ஞாபகத்தோடதான் இருக்கார். நன்னாப் பேசறார். குரல் மட்டும் கொஞ்சம் கம்மினாப்ல இருக்கு. ஆனாலும் உற்சாகமாத்தான் இருக்கார். உன்னோட என்னமோ விவரமாப் பேசணுமாம்."

அம்மா சொல்லிக் கொண்டிருக்கையிலேயே நான் எழுந்து விட்டேன்.

"இதோ, ரெண்டே நிமிஷத்துல கௌம்பிடறேம்மா. நான் போறப்போ ஏதாவது எடுத்துண்டு போகணுமா?"

"இல்லே."

மருத்துவமனையில் பெரியப்பாவின் அறையை நான் அடைந்த போது, அவர் விழித்துக் கொண்டு தான் படுத்திருந்தார். என்னைப் பார்த்ததும் அகத்தின் மலர்ச்சி தமது பரந்த முகத்தில் பெரிய புன்னகையாய் மின்ன, அவர் சற்றே முதுகை நிமிர்த்திக் கொண்டு உட்கார முயன்றார்.

"படுத்துக்குங்கோ, பெரியப்பா. களைப்பாத் தெரியறேள். படுத்துக்குங்கோ," என்றவாறு நான் அவரது கட்டிலுக்குப் பக்கத்தில் இருந்த உயர்ந்த முக்காலியில் உட்கார்ந்தேன்.

"கிருஷ்ணா, நீ எனக்கு ஒரு உதவி பண்ணணும்."

"சொல்லுங்கோ, பெரியப்பா!"

"உனக்கு ஒரு ரெண்டு மாசம் போல லீவ் கிடைக்குமா?"

"எதுக்கு, பெரியப்பா?"

"உனக்கு ரொம்பப் பெரிசா ஒரு எழுத்து வேலை தரலாம்னுட்டு. ஆபீஸ் போயிண்டு வந்துண்டெல்லாம் அந்த எழுத்து வேலையைச் செய்ய முடியாது கிருஷ்ணா. முதல்ல நிறைய படிக்க வேண்டியது இருக்கு. படிச்சுட்டு ஒரே முனைப்பா உக்காந்து தொடர்ச்சியா எழுதினாத்தான் அது சரியா அமையும். என்ன சொல்றே?"

"என்ன எழுத்து வேலை தரப் போறேள், பெரியப்பா?"

"ஒரு பெரிய நாவல் எழுதற வேலை."

"என்னது? நாவல் எழுதற வேலையா? எனக்கா?"

"ஆமாண்டா. உனக்கேதான். என்ன அப்படி பிசாசைப் பார்க்கிற மாதிரி கண்ணை விரிச்சுண்டு பார்க்கறே?"

"என்ன சொல்றேள், பெரியப்பா? புரியும்படியாச் சொல்லுங்கோ."

"நம்ம வீட்டுக் கூடத்துப் பரண்ல கிழக்குப் பக்கத்துச் சுவரோரமா சில டயரிகள் இருக்கு. டயரின்னா இப்ப வர்ற மாதிரி பிரிண்டட் டயரிகள் இல்லே. பைண்ட் பண்ணின நோட்புக்ஸ். ஒவ்வொரு நோட்புக்கோட அட்டையிலயும் அது இன்ன தேதி தொடங்கி இன்ன தேதி வரைக்கும் முடியறதுங்கிறதை எழுதி இருக்கேன். அதை எழுத ஆரம்பிச்சது 1920 ஆம் வருஷம் ஆகஸ்டு ஒண்ணாந்தேதியன்னிக்கு - அதாவது திலகர் செத்துப் போன நாள். நாடே திமிலோகப் பட்டுது அன்னிக்கு."

பழைய ஞாபகங்களில் ஆழ்ந்தவராய்ப் பெரியப்பா சில நொடிகளை மௌனத்தில் கழித்து விட்டுத் தொடர்ந்தார் :

"சுதந்திரம் அடையறதுக்காக அந்தக் காலத்துல மனுஷா எப்படியெல்லாம் கஷ்டப்பட்டா, எப்படி

ஜோதிர்லதா கிரிஜா

எப்படியெல்லாம் தியாகங்கள் பண்ணினாங்கிறதெல்லாம் இந்தக் காலத்துப் பசங்களுக்கு சுத்தமாத் தெரியல்லே..."

"நான் எழுத வேண்டியது நாவலா, இல்லே ஹிஸ்டரியா, பெரியப்பா? தெளிவாச் சொன்னா தேவலை."

"ரெண்டுந்தாண்டா. அதாவது சரித்திர நாவல்ங்கிறாளோல்லியோ? அது."

"பெரியப்பா! எம் மேல உங்களுக்கு இருக்கிற நம்பிக்கைக்காக உங்களுக்கு ரொம்ப தேங்க்ஸ். ஆனா நீங்க வெச்சிருக்குற டயரி குறிப்புகளை வெச்சு ஒரு நாவல் எழுதறதுக்கு வேண்டிய சாமர்த்தியமெல்லாம் எனக்குக் கிடையாது."

"அதுகள்ளாம் வெறும் டயரி குறிப்புன்னு யாருடா சொன்னது? ரத்தம், சத்தம், சிரிப்பு, வெறுப்பு, சோகம், மோகம்..."

"அப்புறம், பாசம், மோசம், வேஷம், கோஷம்..." என்று நான் தொடர பெரியப்பா வாய் விட்டுச் சிரித்தார்.

"நீ இப்படியெல்லாம் தமாஷுக்காகச் சொன்னாலும் இதெல்லாமும் அதுல இருக்குடா, கிருஷ்ணா. தேசப் போராட்ட இயக்கமே முதல்ல கோஷத்துலதானே ஆரம்பிச்சது? நிறைய வேஷங்களும் இருக்கு... உன்னோட விளையாட்டை ஒதுக்கி வெச்சுட்டு, இப்ப நான் சொல்லப் போறதை நீ கேக்கணும்..." என்ற பெரியப்பா சட்டென்று கண் சிமிட்டி, "ஏன்? காதல் கூட இருக்கு..." என்றார்.

"அப்ப மோதலும் இருக்கணுமே?"

"இல்லாமயா? இருக்கு, இருக்கு. நவரசமும் இருக்கு. நீ என்ன பண்றே, எல்லா டயரிகளையும் வரிசையா முதல்ல படிக்கிறே. அப்படிப் படிச்சு முடிச்சதும் உனக்குள்ள ஒரு கனம் நிச்சயமா உருவாகும். நாவல் எழுதணும்கிற எண்ணத்தோட படிக்கணும்கிறது ரொம்ப முக்கியம். அதுல கதாநாயகன் யாரு தெரியுமோ?"

"என்னோட பெரியப்பாதான்! வேற யாரு? அது சரி, கதாநாயகி யாரு?" என்று நான் கண்சிமிட்ட, பெரியப்பா சிரித்துக்



கொண்டார்.

பிறகு வெட்கத்துடன், "எல்லாம் அந்த டயரிலேயே இருக்குடா. நீங்கள்ளாம் நெனச்சுண்டிருக்கிற மாதிரி உங்க பெரியப்பா ஒண்ணும் நித்திய பிரும்மசாரி இல்லே. இதுக்கு மேல நான் அதைப் பத்தி ஏதும் சொல்றதா இல்லே. சொன்னா சுவாரசியம் போயிடும். நீயே படிச்சுத் தெரிஞ்சுக்கோ."

"பெரியப்பா... நீங்களே கூட அதை நாவலா எழுதி இருக்கலாமே?"

"என்னமோ, எழுதணும்னு தோணல்லே, எழுதலே. இப்பவாவது தோணித்தே. அந்த டயரிகள் தவிர, நல்ல லைப்ரரியிலே தேடி சுதந்திரப் போராட்டம் பற்றின சில புத்தகங்களையும் எடுத்துப் படிச்சா உனக்குச் சரித்திரப் பின்னணி நன்னா புரியும்."

"உங்க உடம்பு முதல்ல சரியாகட்டும், பெரியப்பா!"

"நான் என்ன சின்னக் குழந்தையா? எனக்கு நீ தைரியம் சொல்றியா இப்ப? மை டேஸ் ஆர் நம்பர்ட், ஐ நோ இட். என் ஒரே ஆசை பத்து நான் இருபது நாள்னு இழுத்திண்டிருக்காம ரெண்டொரு நாள்ல நான் போயிடணும்."

பெரியப்பாவின் கண்கள் இலேசாய்ச் சிவந்தன.

"நான் பிறந்தது 1905-ஆம் வருஷம். அக்டோபர் மாதம், பதினாறாந்தேதி. அன்னிக்குத்தான் வெள்ளைக்காரன் பெங்காலை ரெண்டா உடைச்சான்" - எதைச் சொன்னாலும் முடிந்த அளவுக்கு அதில் சரித்திர நிகழ்ச்சியைக் கலக்காமல் பேசப் பெரியப்பாவுக்குத் தெரியாது.

"இன்னிக்கு என்ன தேதி? டிசம்பர் பதினெட்டு, 1985! காங்கிரஸ் கட்சி நூற்றாண்டு கொண்டாடிண்டிருக்கிற வருஷம். அப்ப எனக்கென்ன வயசு இப்ப? எண்பது முடிஞ்சுடுத்து. இத்தனை வயசுக்கு மேலயும் இந்த உலகத்துல — இன்னும் சொல்லணும்னா - இந்த நாட்டில நான் வாழணுமா?"

"இந்த நாட்டில" என்ற போது அழுத்தம் தந்து பேசியது அவரது ஏமாற்றத்தையும் துக்கத்தையும் உணர்த்தியது.

மறுநாள் பெரியப்பா தூக்கத்திலிருந்து கண் விழிக்கவே இல்லை. 'வலி தெரியாத சாவு' என்று டாக்டர் சொன்னபோது எங்கள் சோகத்தை மீறி ஓர் ஆறுதல் ஏற்பட்டது.

## 2

பெரியப்பாவின் நாற்காலி இப்போது நிரந்தரமாய்க் காலியாகி விட்டது. அகலமான அடிப்பாகமும் நெடிய முதுகும் உள்ள அந்த நாற்காலியில் உட்கார யாருமே துணியவில்லை. அது எங்கள் வீட்டில் ஒரு காட்சிப் பொருளாகியது. "பெரியப்பா நாற்காலி" என்று பெயர் பெற்றது. பரணிலிருந்து டயரிகளை எடுத்து ஒவ்வொன்றாக அந்த நாற்காலியில் வைத்து எதிரே அதைவிடக் குட்டையான ஸ்டூலில் அமர்ந்து படிக்கத் தொடங்கினேன்.

பெரியப்பாவின் கடைசி ஆசை பற்றி அம்மாவிடம் சொன்னேன். அம்மா பெரியப்பாவைப் பற்றிய சில அந்தரங்கங்களைச் சொன்னார். அப்பா சில முக்கியமான விவரங்களைத் தெரிவித்தார். டயரிகளில் அவரால் குறிப்பிடப்பட்டுத் தற்சமயம் உயிரோடு உள்ளூரிலும் அயலூரிலுமாக இருந்த சிலரைச் சந்தித்தும் பல விவரங்களைச் சேகரித்தேன். சிலர் இறந்து விட்டிருந்தனர். இறந்து போனவர்களின் உறவினர்களைச் சந்தித்த போது சில சந்திப்புகள் பயனுள்ளவையாக இருக்க, மற்றவை பயனற்றுப் போயின.

பெரியப்பா சொன்னது சரிதான் என்பது அவருடைய டயரிகளைப் படித்து முடித்ததும் மிக நிச்சயமாய்த் தெரிந்தது - அது ஒரு நவரச நாவல் என்பது. ஒவ்வொரு டயரியாய்ப் படிக்கப் படிக்கக் கதை மெல்ல மெல்ல உருவாகிக் கொண்டே போயிற்று...

வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் ராமசாமி கவலை படர்ந்து கிடந்த முகத்தைக் கைகளில் ஏந்தியவாறு உட்கார்ந்து கொண்டிருந்தார். உள்ளே இருந்து 'குவா குவா' சப்தம் கேட்கப் போகும் கணத்துக்காக ஆவலுடன் காத்திருந்தார். பிள்ளைப் பேற்று அறையிலிருந்து அவர் மனைவி குஞ்சம்மா வலி தாளாமல் நொடிக்கொரு தடவை குரல் எழுப்பியபோதெல்லாம் தமக்கும் வலிப்பது போன்று அவர் உடம்பைத் திருகிக் கொண்டிருந்தார். மனைவியின் மீது அவருக்கு அவ்வளவு அன்பு. மனைவியின் ஒவ்வொரு பிள்ளைப்பேற்றின் போதும் ஒரு குற்ற உணர்வுக்கு ஆளாவது அவரது இயல்பாக இருந்து வந்தது. பிறந்த குழந்தைகள் தக்கி இருந்திருப்பின், அவர் இரண்டுக்குப்



"இந்த ஆள் வயிறு முட்ட நூடுல்ஸ் சாப்பிட்டுட்டு காசில்லேங்கிறார் முதலாளி!"

"அப்படி எவ்ளோ சாப்பிட்டார்?"

"சும்மா ஒரு ஆறு கிலோமீட்டர் இருக்கும் முதலாளி!"

- வேதபுரி எஸ். ரமேஷ்

பிறகு எப்போதும் வேண்டாமை மனக்கட்டுப் பாட்டின் மூலமே கடைப்பிடித்திருக்கக் கூடியவர்தாம். ஆனால் ஆறு பிறந்தும் ஒன்று கூடத் தக்கவில்லையே. இது ஏழாவது பிரசவம். இப்போது பிறக்கிற குழந்தையாவது தக்கினால் நன்றாக இருக்கும் என்று வேண்டியறியாத தெய்வங்களின் பெயர்களையெல்லாம் சொல்லி வேண்டிக் கொண்டிருந்தார். பிறப்பது பெண் குழந்தையாக இருந்தாலும் சரியே. அவரைப் பொறுத்தமட்டில் ஆண் - பெண் பேதமெல்லாம் இல்லை.

அவருடைய அன்பு மனைவி சுமார் அரை மணி நேரம் யமனுடன் போராடியதற்குப் பிறகு குழந்தை பிறந்தது. 'குவா குவா' சத்தம் காதில் விழுந்ததுமே ராமசாமி வியர்வையால் பளபளத்த முகத்தை மேல் துண்டால் துடைத்தவாறு எழுந்து நின்றார். வாசலுக்கு வந்து அரைக் கதவு திறந்து எட்டிப் பார்த்த அவர் தமக்கை விசாலம், "பிள்ளைக் கொழந்தைடா, செக்கச் செவேல்னு மூக்கும் முழியுமா அப்படியே ஒம் பொண்டாட்டி மாதிரியே இருக்கான் போயேன். இன்னும் கொஞ்ச நேரம் கழிச்சு கூப்பிடறேன், அப்ப வந்து பாரு. என்ன?" என்று விட்டு அவரது பதிலுக்கு நில்லாமல் முகத்தை உள்ளே இழுத்துக் கொண்டு கதவைச் சாத்தினாள்.

கொஞ்ச நேரம் கழிந்ததும் ராமசாமி உள்ளே அழைக்கப்பட்டார். மனைவியருகே ஆனந்தக் கண்ணீரும் புன்சிரிப்புமாக நின்றார்.

"ஏன்னா? இதுவாவது தக்குமா? எனக்கு பயம்மா இருக்குன்னா," என்று கண்கலங்கினாள் குஞ்சம்மா.

"அழாதே, குஞ்சம்மா. இது பிழைச்சுக்கும்னு எனக்குத் தோணறது. குண்டா, ஆரோக்கியமா தெரியறது. செதுக்கப்பட்ட சிலை போல இருக்கு. அழகனாவும் இருப்பான். நீ வேணாப் பாரு."

அவர் எதிர்பார்த்தபடியே குழந்தை தக்கிவிட்டது. அதற்குத் தொட்டில் போட்டுப் பெயர் வைத்தபோது, அப்போது மிகப் புகழ் வாய்ந்த நாட்டுத் தலைவராக இருந்த பால கங்காதர திலகரின் மீதுள்ள மரியாதையால் "கங்காதரன்" என்று ராமசாமி அதற்குப் பெயரிட்டார். அது கடவுளுடைய பெயராகவும் இருந்தமையால் யாரும் ஆட்சேபிக்கவில்லை. அவருடைய அக்காள் விசாலம் மட்டும், "நீ ஒருத்தன் காங்கிரஸ், காங்கிரஸ்னு ஜபிச்சுண்டிருக்கறது போறுண்டா. இதுக்கு வேற உன்னோட உபதேசங்களையெல்லாம் பண்ணாதே. நேக்குக் கெட்ட கோவம் வரும், ஆமா!" என்றாள்.

பள்ளிக்கூட ஆசிரியராக இருந்த ராமசாமி தம் மகன் கங்காதரன் தம்மைக் காட்டிலும் அதிகமாய்ப் படித்துப் பட்டங்கள்



"மின்சார வாரியத்துல காஷியர் வேலைக்காக இண்டர்வியூவுக்குப் போயிட்டு வந்தியே... ரிசல்ட் என்னாச்சு...?"
" 'ப்யூஸ்' ஆயிடுச்சுடா!"

- கோவிந்தன்

பெற வேண்டும் என்று பெரிதும் அவாவினார். கங்காதரனும் நன்றாய்ப் படிக்கக்கூடியவன் என்பதற்கான அறிகுறிகள் தெரிந்தன. அவருக்குப் பெருமை பிடிபடவில்லை.

"அடியே, குஞ்சம்மா, நம்ம பிள்ளை பிரமாதமா வரப் போறான், பார்த்துண்டே இரு. பெரிய படிப்புப் படிக்க வைக்கப் போறேன் இவனை எப்படியாவது" என்பார் வாய்க்கு வாய்.

"ஆமா. நீங்களும் நானும் நெனச்சாப்ல ஆச்சா? அவன் நெனக்க வேண்டாமா? அவனும் உங்க காந்து அடிச்சு, காங்கிரஸ் கீங்கிரஸ்னு சேர்ந்து தொலைக்காம ஒழுங்கா இருக்கணுமே!"

"இத பாரு! படிப்பு முடியற வரைக்கும் அதுக்கெல்லாம் நான் அவனை அனுமதிக்கிறதா இல்லே. ஆனா படிக்க முடிச்சப் பெரியவனானதும் அது அவனோட இஷ்டத்தைப் பொறுத்த விஷயம்னு விட்டுடுவேண்டி, தலையிட மாட்டேன். நாட்டில இருக்கிறவாளுக்குச் சுதந்திரம் வேணும்னு போராடிண்டிருக்கிற நான், வீட்டில இருக்கிறவாளுக்குச் சுதந்திரம் தரலைன்னா அப்புறம் என்ன அர்த்தம்?"

"அது என்ன நாட்டு சுதந்திரமோ, வீட்டு சுதந்திரமோ, நாளைக்கு நீங்க ஜெயிலுக்குப் போய் அப்படியே ஆயுள் தண்டனை அடையறேன்னு ஒரு பேச்சுக்கு வெச்சுப் போம். எங்களோட கதி என்னாறது? அதை யோசிச்சேளா?"

"எல்லாரும் இப்படியே சுயநலத்தோட நம்ம குடும்பம் என்னாறது, குழந்தை, பெண்டாட்டி என்னாறதுன்னெல்லாம் யோசிச்சிண்டிருந்தா வெள்ளைக்காரனை எப்ப வெளியேத்தறது? எப்ப நமக்கு சுதந்திரம் கிடைக்கிறது?"

"என் கேள்விக்கு இதுவா பதில்? எங்க கதி என்ன! அதுக்குப் பதில் சொல்லுங்கோ."

அவள் பேசிய பேச்சைக் காட்டிலும் அப்படியும் ஆகி விடுமோ என்ற அச்சம் கிளர்த்திய கோபத்தில் ராமசாமி கத்தினார்.

"கண்டமேனிக்குப் பேசாதடி, குஞ்சம்மா. அப்படியெல்லாம் மாட்டிக்க மாட்டேன். எல்லாம் ரகசியமாத்தான் நடந்திண்டிருக்கு. நீ இப்படி எட்டு வீட்டுக்குக் கேக்கற மாதிரி கத்தி என்னோட ரகசியத்தை வெளிப்படுத்தி னாத்தான் உண்டு."

"என்னை அடக்கறதுக்கு முந்தி நீங்க உங்க குரலைக் கொஞ்சம் அடக்கிக்கக் கத்துக் குங்கோ. நீங்க இப்ப கத்தினது லண்டன்ல கேட்டிருக்கும்."

"லண்டன்ல கேட்டுதோ இல்லையோ, வாசல்ல நிச்சயம் கேட்டுது!" என்று கூறிக் கொண்டே அப்போது ஒருவர் உரிமையோடு உள்ளே வந்தார். மணவாளன்தான் அவ்வாறு நட்புரிமையை எடுத்துக் கொண்டவர்.

"வாங்க, வாங்க, நாயுடுகாரு. என்ன, பேப்பரும் கையுமா வந்திருக்கீர்?"



"சே! நம்ம பன்னீர்செல்வம் செஞ் சதை நினைச்சாலே கேவலமா இருக் குப்பா!"

"எதைச் சொல்றீங்க?"

"ஸ்டார் ஹோட்டல் ரிசப்ஷன்ல வந்து 'மாவாட்ற வசதி உண்டா?'ன்னு கேட்டுட்டுப் போறாரே!"

- சீர்காழி வி. ரேவதி

"நீர் ஸ்கூலுக்குப் போய்த்தான் பேப்பர் படிப்பீர்னு எனக்குத் தெரியும். அதான் சேதியைச் சொல்லிட்டுப் போலாம்னு வந்தேன்."

இருவரும் அருகருகே ஊஞ்சலில் உட் கார்ந்து கொண்டார்கள்.

"இந்தாரும். நீரே படியும்..."

ராமசாமி அவர் சுட்டிய இடத்தில் காணப்பட்ட செய்தியை முனகலாய்ப் படிக்கலுற்றார்.

'மே மாதம் ஆறாந் தேதியன்று இங்கி லாந்தில் மன்னர் ஏழாம் எட்வர்டு கால மானார். இவ்வாண்டு - 1910 - ஜூன் மாதம் 22 ஆம் தேதி வாரிசு ஐந்தாம் ஜார்ஜுக்கு வெஸ்ட்மினிஸ்டர் அப்பேயில் முடிசூட்டு விழா நடைபெறும். இந்த அதிகாரபூர்வமான முடிசூட்டு விழா நடந்து முடிந்த பின்னர் அரச தம்பதியர் இந்தியாவுக்கு வருகை புரி வார்கள். டில்லி மாநகரில் இங்கிலாந்தில் தங்களுக்கு முடிசூட்டு விழா நடந்து முடிந்தது பற்றி அரச தம்பதியர் இந்திய மக்களுக்கு அறிவிப்பார்கள். அத்துடன் அதனைக் காண இங்கிலாந்துக்கு வர முடியாது போன இந்தி யர்களுக்காக அதன் நினைவு விழாவை டில்லியில் அவர்கள் விமரிசையாய்க் கொண் டாடுவார்கள்...'

நாளிதழை அவரிடம் திருப்பிக் கொடுத்த ராமசாமி, "இவனோட முடிசூட்டு விழா வைப் பார்க்கலேன்னு யாருய்யா இந்தியா வில அழுதது?" என்றார் கடுப்பாக.

"நீங்க வேற. அதுக்கு அழறவங்களும் இந்த நாட்டில இருக்குறாங்க ஓய். உமக்குத் தெரியல்லே."

"அப்படிப்பட்ட துரோகிகளும் இருக் கிறதாலதான் வெள்ளைக்காரனால இந்தியா பூராவையும் கபளீகரம் பண்ண முடிஞ்சது." என்றார் ராமசாமி இன்னும் அதிகக் கடுப்புடன்.

"இங்க எதுக்குய்யா வர்றது? இங்க வந்து தர்பார் பண்ணி நம்ம கஜானாவைக் காலி பண்றதுக்கா?"

ராமசாமி குபீரென்று சிரித்தார். "நீர் வேற! இல்லேன்னா இந்த நாட்டு கஜானாவில இருக்கிற பணம் இந்த நாட்டு மக்களுக்காகத் தான் முழுக்க முழுக்க செலவழியுதாக்கும்."

"என்னமோ, போங்க அய்யர்வாள். ஒண் ணும் நல்லாவே இல்லே. இந்திய தேசியக் காங்கிரஸ் கட்சி தொடங்கி எத்தினி நாளாச்சு. 1885-லே 'இன்டியன் நேஷனல் யூனியன்' என்கிற பேர்ல தொடங்கி, அந்த வருஷமே முதல் கூட்டத்தைப் பம்பாய்ல நடத்தினாங்க. போன வருஷம் வரையில மொத்தம் இருபத்தி நாலு கூட்டம் நடந்திருக்குது. என்ன சாதிச் சுட்டோம் பெரிசா? சொல்லுங்க. கிட்டத் தட்ட இருபத்தஞ்சு வருஷமய்யா, இருபத் தஞ்சு வருஷம். அது கொஞ்ச நாள் இல்லியே?" - மணவாளனின் கண்கள் அகன்று அவற்றில் சன்னமாய்ச் சிவப்பு ஏறியது.

ராமசாமி புன்னகை செய்தார். "இருபத் தஞ்சு வருஷம்கிறது ஒரு தனி மனுஷனோட வாழ்க்கையில நீண்ட நாள்தான் நாயுடுகாரு. ஆனா ஒரு தேசத்தினுடைய வாழ்க்கையில அது ரொம்பச் சின்ன பீரியட்தாங்காணும். கொஞ்சங் கொஞ்சமாத்தானே சாதிக்க முடியும்?"

"அது சரி."

"கொஞ்சம் உள்ளே வரேளா?"

"வந்துட்டேன்."

ராமசாமி எழுந்து போய்க் காப்பிக் குவளைகளையும் வட்டைகளையும் எடுத்து வந்து ஊஞ்சலில் வைத்தார்.

"ஆடாம உக்காரும் அய்யர்வாள். காப்பி

கொட்டிடும்," என்றபடி, தமது குவளையைக் கையில் எடுத்துக் கொண்ட மணவாளன், காப்பியை ரசித்துக் குடிக்கத் தொடங்கினார்.

"உங்க சம்சாரத்துக்குன்னு எங்கேருந்து தான் இப்படி ஒரு கைமணம் வந்திச்சோ, காப்பி பிரமாதங்காணும். என் சம்சாரமுந் தான் காப்பி போடுது. வாயில வைக்க வழங்கலே" என்று மணவாளன் இரைந்து விமர்சிக்க, உள்ளே கேட்டுக் கொண்டிருந்த விசாலமும் குஞ்சம்மாவும் சிரித்தார்கள்.

காலியான குவளையைத் தரையில் வைத்த மணவாளன், "நம்ம வங்காளத்து அரவிந்த கோஷ் பாண்டிச்சேரியில செட்டில் ஆயிட்டாராம். தெரியுமா?" என்றார்.

"அட, யாரு சொன்னா உமக்கு?"

"பாண்டிச்சேரியில நம்ம சொந்தக்காரங்க இருக்காங்கல்ல? அவங்ககிட்டேருந்து கிடைச்ச தகவல்தான்."

"இங்கிலீஷ்காரன் கண்ணுல மண்ணைத் தூவற இந்த வேலையை முதல்ல ஆரம்பிச்சு வெச்சது நம்ம பாரதியார்தான். இல்லியா? இப்ப அவரை அரவிந்தகோஷ் முதற் கொண்டு ஃபாலோ பண்ணத் தொடங்கிட்டாங்க பாரும். நம்ம பாரதியார் இல்லாடிங் காணும். புதுச்சேரியில போய் ஃப்ரெஞ்சுக்காரன் ஆட்சிக்குக் கீழே செட்டில் ஆயிட்டா இங்கிலீஷ்காரனால ஒண்ணும் பண்ண முடியாதுன்னு டக்குனு தோணி அங்க போயிட்டாரு, பாரும். இவங்களுக்குள்ள தொடர்பு இருக்குமா?"

"அதைப் பத்திச் சொல்றதுக்குத்தான் வந்தேங்காணும். அரவிந்தர், பாரதியார் இவங்கல்லாம் பாண்டிச்சேரியில அடிக்கடி சந்திக்கிறாங்களாம். வெறுமனே சந்திப்பு, மீட்டிங், பேச்சு, எழுத்துன்னு மட்டும் போயிட்டிருந்தா எந்த ஜென்மத்துலேங்காணும் இந்தியா சுதந்திரம் அடையிறது? அரவிந்தரும் முன்னே இருந்த அளவுக்குத் தீவிரமா இல்லையாம்!"

"நாயுடுகாரு, ஒண்ணு சொல்றேன், கேளும். முதல்லே ஜனங்களுக்கு, நாம அடிமைகளா இருக்கோம்கிறது புரிஞ்சு அவங்களுக்கு வெள்ளைக்காரன் மேல தாங்க முடியாத ஆத்திரம் வரணும். அதுக்கு அப்புறந்தான் புரட்சி வெடிக்கும். அதுக்கு இன்னும் நிறைய நாளாகும். திலகர் வேற நாடு கடத்தப்பட்டு இப்ப பர்மாவில இருந்திட்டிருக்காரு. பாவம்!, அம்பத்திரண்டு வயசுல நாடு கடத்தல். என்ன அயோக்கியத்தனம். என்ன கஷ்டமெல்லாம் கொடுக்கிறாங்களோ?"

"திலகர் மாதிரி ஒரு பெரிய தலைவர் பர்மா மாண்டலே ஜெயில்ல ஆறு வருஷம் இருக்கறதுங்கிறது எவ்வளவு பெரிய துரதிருஷ்டம். பம்பாய்ல அவரைத் திலக் மகராஜ்னு தான் சொல்லுவாங்களாம். அம்புட்டு செல்வாக்கு அவருக்கு. கோர்ட்ல மூச்சு விடாம இருபத்தொரு மணி நேரம் தன் கேசைத் தானே வாதாடிப் பேசினவராச்சே!"

"பின்னே? பத்திரிகையில நம்ம கருத்துக்களை வெளியிடற சுதந்திரத்தைத் தடை செய்யற அடக்குமுறைச் சட்டத்தை எதிர்த்துக் கேசரி பத்திரிகையை நடத்திட்டிருந்த திலகர் அதுல எழுதாம இருப்பாரா? இதென்னய்யா அக்கிரமம்? நம்ம நாட்டுல வந்து உக்காந்துக்கிட்டு, நம்ம பத்திரிகை சுதந்திரத்துல தலையிடறதா?"

அச்சமயம் வாசற்புறத்தில் நிழல் தட்டியது. கதவை யாரோ விரலால் தட்டுகிற ஓசையும் கேட்டது. ராமசாமி எழுந்து சென்று பார்த்தார்.

இருபத்தைந்திலிருந்து முப்பதுக்குள் வயது சொல்லக்கூடிய ஒரு பெண், புன்சிரிப்புடன் அவரைப் பார்த்துக் கை கூப்பினாள்.

"மிஸ்டர் ராமசாமிங்கறது..."

"நான்தான்."




உங்கள் பையனைப் பலவிதமாக அழைக்கலாம். ஆனால் ஒவ்வொன்றுக்கும் ஓர் அர்த்தம் இருக்கிறது! பிள்ளை : தொல்லை தரும் மகன்; மகன் : குடும்பத்தைக் காப்பாற்றுகிறவன்; மைந்தன் : குடும்பத்துடன் சுற்றத்தாரையும் தாங்க வல்லவன்; குமாரன் : தந்தையை விட அறிவில், திறனில் மிக்கவன்; புத்திரன் : தந்தையை நற்கதிக்கு அனுப்பவல்ல நல்லறம் செய்பவன்.

- வாரியார்

தகவல் : வயலூரான்

"உங்களிடம் கொஞ்சம் பேசணுமே."

"என்ன விஷயமா?"

"நான் உள்ளே வரலாமா?"

"ஐ'யாம் சாரி, சாரி. உள்ள வாங்கோம்மா. வாங்கோ."

வழிநடையில் காலணிகளை உதறிய பின் அந்தப் பெண் ராமசாமியைத் தொடர்ந்து உள்ளே வந்தாள். மணவாளன் ஊஞ்சலிலிருந்து இறங்கினார். அடுக்களையிலிருந்து எட்டிப் பார்த்த குஞ்சம்மாவின் பார்வையும் அந்தப் பெண்ணின் பார்வையும் சந்தித்துக் கொண்ட போது, புதியவளின் பார்வையில் அன்பு தெரிய, குஞ்சம்மாவின் பார்வையில் அந்த உணர்ச்சி சிறிதும் இல்லை.

(தொடரும்)

# காதல் கூண்டிலிருந்து விடுதலை!

♦ "காதல் கூண்டுக்குள்ளேயே என்னைப் போட்டு அடைச்சுட்டாங்க. கதவைத் திறந்து பறக்க விட்டதற்கு நன்றி" என்று கே. பாலசந்தருக்கு மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கொண்டாராம் ரமேஷ் அரவிந்த்.

'டூயட்' - படத்தில் கிடைத்த திருப்புமுனை, கமல் படத்திலும் கதாநாயக வாய்ப்பை வழங்கியிருக்கிறது. பாலு மகேந்திரா இயக்கத்தில் தயாராகி வரும், இன்னும் பெயரிடப்படாத, நூறு சதம் காமெடி படத்திலும், ஒப்பந்தமாகியிருக்கிறார், ரமேஷ் அரவிந்த்.

"அருவியிலிருந்து கொட்டும் போது அது சாதாரண தண்ணீர்தான்... ஆனா அதுக்குக் கீழே டர்போ இயந்திரம் வைச்சதும் மின்சாரம் கிடைக்குது. அதுபோல... நடிகர்களெல்லாம் தண்ணீர் போல. டர்போ போன்ற ஒரு டைரக்டர் கிடைச்சதும் நடிப்புத் திறமை வெளிப்படுகிறது" என்று சின்ன உவமையோடு விளக்கினார். மெக்கானிக்கல் இன்ஜினியரிங் படித்தவராச்சே!

ரமேஷ் அரவிந்தின் உற்சாகத்திற்கு இன்னொரு காரணமும் உண்டு. மலையாளத்தில் 'அவன் அனந்த பத்மநாபன்' என்ற படத்தின் மூலம் அறிமுகமாகியிருக்கிறார் - மூன்று வயதுக் குழந்தையின் மன முதிர்ச்சியுடன் பேசிப் பழகும் ஓர் அப்பாவி கிராமத்து இளைஞரின் பாத்திரம். இதில் ரமேஷ் புதிய பரிமாணத்தைப் பெற்றிருக்கிறார். கொசுறாக ஒரு நியூஸ் : ரமேஷுக்குப் பிரபு வைத்திருக்கும் செல்லப் பெயர் 'யூ.என்.ஓ. டிப்ளமாட்'. எந்த சிக்கலிலும் மாட்டிக் கொள்ளாமல், தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருப்பதால் இந்த அடைமொழியாம்!

♦ 'சரத்' என்னும் புதிய இயக்குநர் கதை, திரைக்கதை, வசனம் எழுதி இயக்கும் படம் "அடுத்த கட்டம்!" தாய்க் கட்சியிலிருந்து பிரிந்து வந்து தனிக்கட்சி ஆரம்பிக்கும் ஓர் அரசியல்வாதியாக விஜயகுமார் நடிக்கிறார். அந்த பாத்திரத்திற்காக விஜயகுமாருக்குப் பலவிதமாக மேக்கப் போட்டுப் பார்த்திருக்கிறார்கள். எதுவும் 'பளிச்'சென்று இல்லை. கடைசியாக ஒரு மேக்கப் போட்டுப் பார்த்ததில்,



• ஆதித்யன்



அப்பாடி! அது தத்ரூபமாக அமைந்துவிட்டது. ஸ்டில்லை கவனியுங்கள்... கெட்டி மீசை, கறுப்புத் துண்டு...

♦ 'கிழக்கு செவக்கையிலே, கீரை அறுக்கையிலே' - சீவலப்பேரி பாண்டி படத்தில் இந்தப் பாடலைப் பாடியிருப்பவர் ராஜகோபால். (டீவி. புகழ் சந்தியா ராஜகோபாலின் கணவர்) இசை... ஆதித்யன். 'சீவலப்பேரி பாண்டி' காசெட் விற்பனை அமோகமாக இருப்பதைத் தொடர்ந்து, 'துறைமுகம், 'பக்காத் திருடன்' 'சின்னப் புள்ள' ஆகிய படங்களில் இசையமைத்துக் கொண்டிருக்கிறார் ஆதித்யன்.

"1994 - சினிமா இசை எப்படி இருக்கிறது?"

"பழைய இட்லி சாம்பார்தான். ஆனால் புத்தம் புதிய அலுமினிய தாளில் பேக்கிங் செய்யப்பட்டு வருகிறது... ஒலியமைப்பில், புதுமை காட்ட, இப்போ நிறைய நவீன வசதிகள் இருக்கு. அதை வெச்சு, பழையதையே, புது இசை போல தர முடியுது. ஜனங்களுக்குப் பிடிச்சா சரிதான்" என்கிறார் ஆதித்யன்.



♦ "மைந்தன்' அப்படின்னா என்ன...? ஐயா, உங்களுக்குத் தெரியுமா? அம்மா... நீங்க சொல்லுங்க" என்று கிராமத்து ஜனங்களிடம் கேட்டிருக்கிறார் இயக்குநர் புகழேந்தி...

"இது கூட தெரியாம இருக்குமா? 'மைந்தன்'னா மகன்..." ஊர்ப் பெரிசுகள் சட்டென்று பதில் தந்ததும்தான் உயிரே வந்ததாம்!

'மைந்தன்' என்று செந்தமிழ்ப் பெயர் வைத்தால் பாமர மக்களுக்குப் புரியுமா?" என்று பலரும் கிளப்பி விட்டதில் வாடிப் போயிருந்தாராம். நியாயம்தானே? 'டூயட்', 'ஜென்டில்மேன்' போன்ற ஆங்கில டைட்டில்கள்தானே எல்லாருக்கும் புரிகிறது!

♦ சமீபத்தில் லண்டன் போயிருந்த சுகன்யா, அங்கு 'லிமோசின்' காரில் பயணம் செய்த சொகுசை இன்னமும் மறக்காமலிருக்கிறார்.

காரணம் அது சாதாரணக் கார் அல்ல; ராஜ பரம்பரையினரும் பெரும் பெரும் கோடீஸ்வரர்களுமே வைத்திருக்கும் கௌரவத்துக்குரிய விஷயம் அது. "வெண்ணெய் போல் வழுக்கிக் கொண்டு ஓடும் அந்தக் காரை வாங்க வேண்டுமென்றுதான் நினைத்தேன். ஆனால் நமது இந்தியச் சாலைகளுக்கு அது ஒத்து வராது என்பதால் விட்டு விட்டேன்!" என்று வருத்தத்தோடு சொல்கிறார்.

- ஹர்ஷராஜ்

அடுத்த இரண்டு மாதங்களில்
உங்கள் வாயிற்கதவுகள்
தட்டப்படப்போகின்றன.
முதல்
தட்டுக்கே
திறந்து
விடுங்கள்.



# சந்தாதாரர்களே!

ஸ்ரீராம் சிட்ஸின் தனிச்சிறப்பு அது 7,50,000 சந்தா தாரர்களைப் பெற்றிருப்பதுதான். அதன் ஆண்டு வணிகம் ரூ.400 கோடி. ஒவ்வொரு நாளும் வினியோகிக்கும் ஏலத் தொகை ரூ 1 கோடி. ஸ்ரீராம் சிட்ஸ் ரூ.650 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்களின் ஓர் அங்கம். இந்நிறுவனங்கள் 1995-ல் அடையத் திட்டமிட்டுள்ள மதிப்பு ரூ.1000 கோடி.

காலங்காலமாகக் கடைப்பிடித்து வரும் பண்பாட்டின் அடிச்சுவட்டில் இப்போது ஸ்ரீராம் சிட்ஸ் அதன் சந்தா தாரர்களைக் கௌரவிக்கப் போகிறது. அதன் பலனாக அவர்களுடைய தொடர்பு புதிய வலுப் பெற்றுத் தொடர்ந்து நீடிக்கப் போகிறது.

தனிச் சிறப்பு வாய்ந்த இக்கௌரவம் ஸ்ரீராம் சிட்ஸ் சந்தா தாரர்களுக்கு மட்டும்தான்.

**உங்கள் வாயிற்கதவின் மறுபுறம் ஒரு வாய்ப்பு உங்களுக்காகக் காத்திருக்கப் போகிறது. அது என்னவென்று உங்களால் ஊகிக்க முடிகிறதா? உங்களைக் கௌரவிக்கும் வகையில் ஒரு சிறப்புச் சலுகை... அதன் மூலம் நீங்கள் பெறப்போகும் பல்வேறு மகிழ்ச்சி தரும் பயன்கள்... தெரிந்து கொள்ள வேண்டுமா?**

**முதல் தட்டுக்கே வாயிற்கதவைத் திறந்து விடுங்கள்.**




ஸ்ரீராம் சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்:"சுப்பிரமணியம் பில்டிங்",
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் — உங்கள் வளமைக்குப் பாதை*

ADWAVE/SCI/4743/TAM B

# குழந்தை

கனகுவுக்கு லேசாய் வலி எடுத்தது.... "அம்மாவ்..." என்று முனங்கினவாறே அழைத்தாள்.

காமாட்சி... "கனகு... என்னம்மா பண்ணுது?" என்று பாயில் இருந்து எழுந்து உட்கார்ந்தாள். சிம்னி விளக்கின் வெளிச்சத்தைத் தூக்கலாய் வைத்தாள்.

"வலிக்குதும்மா..."

"டாக்டரம்மா ரெண்டு மூணு நாளு ஆகும்னுல சொல்லிக்கிட்டாங்க."

டாக்டரம்மா கொடுத்த, 'வலித்தால்' கொடுக்கும்படி சொன்ன மாத்திரையை கனகுவுக்குக் கொடுத்தாள்... "டீ வாங்கியாரவா?"

கனகுவுக்கு டீ குடிக்க வேண்டும் போல் தான் இருந்தது. ஆனால் அம்மாவை விட்டுப் பிரிய மனசில்லை. ஏதோ ஒரு பீதி நெஞ்சை அடைத்துக் கொண்டு நின்றது. தகப்பனும் இல்லை. புருஷனும் இல்லை என்றாயிற்று. அம்மாவும் போய் விட்டால்... விதவிதமான குழப்பங்கள்...தேவையற்ற அனாவசியமான பயங்கள் - கனகுவை இம்சித்தன. வயிற்றுக்குள் சிசு காலை உதைக்கிறதோ என்னவோ. கடா முடா என்று சப்தம். காமாட்சி தூக்கு வாளியைக் கழுவும் சப்தம் கேட்டது. "கனகு... பொறை ஒண்ணு வாங்கியாரேன்... சாப்பிட்டுட்டு செத்த நேரம் நல்லாத் தூங்கு" என்று மடப்புரம் மாரியம்மனின் போட்டோவுக்குப் பின்னால் ஒளித்து வைத்திருந்த ரூபாயில் இருந்து இரண்டு ரூபாய் நோட்டை எடுத்துக் கொண்டு "ஜாக்கிரதை கனகு" என்று டீக்கடைக்குக் கிளம்பினாள். கதவை நன்றாக இழுத்து விட்டுச் சென்றாள்.

கனகு மடப்புர மாரியம்மனின் படத்தைப் பார்த்தாள். சிம்னி விளக்கின் வெளிச்சத்தில் மங்கலாய்த் தெரிந்தது. ருத்ர தாண்டவமாடுவது போன்று இருந்தது. 'கையில் இத்தனை ஆயுதங்களை வைத்துக் கொண்டு சும்மா இருக்கியே தாயே... என்னிக்காவது அயோக்யர்களை, அட்டூழியஞ்செய்றவங்களைத் தண்டிக்கணும்னு நினைச்சது இல்லையா தாயே... தண்டிச்சு இருந்தா என்னை மாதிரி பொட்டச்சிகளுக்கு இத்தனை கஷ்டம் தான் இருக்குமா...'

மடப்புரம் மாரியம்மன் படத்திற்குப் பின் காசை ஒளித்து வைப்பது என்பது - இன்று நேற்றல்ல, பல வருஷமாய் நடப்பது. காமாட்சியின் புருஷன் - கனகுவின் அப்பன். ஒரு பெரிய குடிகாரன். அப்போதெல்லாம் அவன் கொத்தனார் வேலைக்குப் போய் தினமும் இருபத்தி அஞ்சு ரூபாய் சம்பளம் வாங்கினான். அன்றைய காலத்தில் இருபத்தி அஞ்சு ரூபாயில் செலவெல்லாம் போக மிச்சம் பிடிக்கலாம். குடிகாரனைக் கொண்டவளுக்கு வியர்வையும், அடி உதையும்தான் மிஞ்சியது.

இவனை நம்பிப் பிரயோசனம் இல்லை என்று எண்ணியவளாய் காமாட்சி - நாலைந்து வீட்டில் வீட்டு வேலைகளைப் பார்க்க ஆரம்பித்தாள். ஏதோ கிடைத்தது. சம்பளத்தைப் பணமாய் வாங்கினால் ரோட்டிலேயே காமாட்சியிடம் புருஷன்காரன் பணத்தைப் பிடுங்கி விடுவான். அவன் தான் சம்பாதிப்பதை அழிக்கிறான். நான் சம்பாதிப்பதையுமா அழிக்க வேண்டும்.. ஒன்னுமே இல்லாமல் செய்ய வேண்டும்.

பார்த்தாள் காமாட்சி.. தான் வீட்டு வேலை பார்ப்பவர்களிடம் பணங்காசுக்குப் பதிலாய் அவர்கள் வீட்டில் மீந்தின சோறு, பழைய துணிமணிகளையே சம்பளக்காசாகப் பெற்றுக் கொண்டு வந்தாள். அதெல்லாம் போகக் கிடைக்கும் பணத்தை, - அவன் வீட்டில் இல்லாத நேரம் மடப்புரம் அம்மனின் படத்துக்குப் பின்னால் ஒளித்து வைத்து விடுவாள். அவனிடம் குடிக்கக் காசில்லாத போது, வீட்டில் அரிசிப் பானையில் இருந்து ஜமுக்காளம் வரை எல்லாவற்றையும் தட்டிக் காசு உள்ளதா என்று தேடுவான்.

ஏனோ - மடப்புரம் அம்மன் போட்டோவுக்குப் பின்னால் மட்டும் கையை விட்டதில்லை.

இப்படித்தான் ஒரு நாள் - குடிக்க காசைத் தேடு தேடு என்று தேடினான். கிடைக்கவில்லை. கோபத்தில் காமாட்சியை அடித்து நொறுக்கினான். அப்போதுதான் கனகு சடங்காகி இருந்த சமயம். அவளையும் அடித்தான். "சடங்கான பிள்ளைய அடிக்கிறியே... அவளுக்கு நாலு காசு சேர்த்து வைச்சுக் கல்யாணம் பண்ணி வைக்கணுங்கிற எண்ணம் இல்ல. குடிக்கிறதுக்கும் கூத்தாடுறதுக்கும் மட்டும் நினைப்பு இருந்துக்கிட்டே இருக்கு..." என்று காமாட்சி கூற, 'தெரியும்டி

# யோகி

முண்டை' என்று வாயில் ஒரு குத்து குத்தி விட்டுப் போனான்.

போன போது எட்டு மணி இருக்கும். எப்போதும் எங்கு போனாலும் எவ்வளவு குடித்தாலும் - பத்துப் பதினொரு மணிக்கு வந்து விடுவான். அன்று விடிய விடிய வர வில்லை.

விடிந்த போது - புருஷனின் சிநேகிதன் ஒருவன் வந்து கதவைத் தட்டி, "காமாட்சி.. உம் புருஷன் கள்ளச் சாராயத்தைக் குடிச்சிட்டு விழுந்து கிடக்கான். வா..." என்றதும் காமாட்சி பதறியடித்துக் கொண்டு கிளம்பினாள். "அவன் கூட இன்னும் பத்துப் பேர் கள்ளச் சாராயம் குடிச்சிட்டு பேச்சு மூச்சு இல்லாமல் கிடக்காங்க..." என்றாள்.

"அய்யயோ... போன மாசம் கூட பத்துப் பேர் கள்ளச்சாராயம் குடிச்சு செத்துப் போனார்களே... அப்போ இவருக்கு ஒண்ணும் ஆகக் கூடாது" என்று வேண்டினாள். பதறினாள். ஆனால் அந்தப் பதற்றம் கொஞ்சம் கொஞ்சமாய் அவளுக்குள் அடங்கிற்று. ஏன் பதற வேண்டும். ஒழுக்கமான புருஷனாய் இருந்து இருந்தால் பதறலாம். இவன் பண்ணாத அட்டூழியங்கள் இல்லை. குடிப்பது, கஞ்சா அடிப்பது... வேலைக்குப் போன இடத்தில் பெண்களை வம்பு செய்வது.

காமாட்சி போன போது - அவன் போய்ச் சேர்ந்து இருந்தான். முன்னாடியே அவன் இறந்து விட்டான். இவள் பதறி, 'ஒண்ணு கிடக்க, ஒண்ணு ஆயிடுமே' என்றுதான் - 'இழுத்து'க்கிட்டு கிடப்பதாகச் சொல்லி இருந்தார்கள்.

காமாட்சிக்குள் எதுவும் தோவில்லை. அவன் போனதில் துளியூண்டு கூட வருத்தமோ, துக்கமோ இல்லை. இருந்து என்ன கொடுத்தான். இல்லாமல் போனதற்கு அழ... இனி அடி உதைகளில் இருந்தாவது நிம்மதி கிடைக்கும்... இப்படித்தான் காமாட்சிக்கும், கனகுவுக்கும் ஒரு குடிகாரனிடத்தில் இருந்து நிம்மதி கிடைத்தது.

பிற்பாடு - கனகுவும் குடிகாரனுக்கு வாழ்க்கைப்பட்டு அழ வேண்டும் என்று விதி இருந்ததே...

காமாட்சியின் புருஷன் செத்துப் போனதும் - அவன் பணிபுரிந்த காண்ட்ராக்டர் கனகுவுக்குச் சித்தாள் வேலை போட்டுக் கொடுத்தார். இப்போது இருவரிடத்திலும் காசு ஓரளவு புழங்கியது... இரண்டே வருஷத்தில் கனகுவுக்குக் கல்யாணம் பண்ணும் அளவுக்குக் காசு சேர்த்து விட்டாள் காமாட்சி.

கல்யாணத்தைத் தன் சக்திக்கு முடிந்த அளவு செய்து வைத்தாள். கனகுவின் கணவன் டீக்கடையில் வேலை பார்த்தான். டீக்கடையில் வேலை பார்த்தாலும் அவனுக்குச் சாராயக் கடையின் வாசலையே ரொம்பப் பிடித்தது. கனகுவுக்கு அவன்



தண்ணி போடுவது தெரிந்ததும் கவலையா கவும், பயமாகவும் போனது. நேற்று வரை தன் அப்பன் பண்ணின அட்டூழியத்தை நினைத்துப் பார்த்தாள். இனி தனக்குத் தன் அம்மாவின் கதிதானோ என்று கலக்கமுற் றாள். தன் அப்பனைப் போன்றே இவனும் சம்பாதித்த காசை எல்லாம் அழிக்கவே செய்தான். கனகு திரும்ப சித்தாள் வேலைக் குப் போய் மடப்புரம் அம்மன் படத்துக்குப் பின்னால் காசை ஒளித்து வைத்தாள்.

சம்பாதிக்கும் காசைத் தன்னிடம் தர மறுக்கிறாள் என்று கனகுவை அடிக்க ஆரம் பித்தான். கனகு அம்மா வீட்டிற்கு வந்து, நடந்ததைச் சொல்லிப் புலம்பினாள். சமா தானப்படுத்தி அனுப்பினாள். பத்து நாளைக் கொருமுறை கனகு வந்து அழுவது வாடிக் கையாய் இருந்தது. பார்த்தாள் காமாட்சி... "உன்ன கிளி மாதிரி வளர்த்தது அவன்கிட்ட நீ அடி வாங்கிச் சாகவா... நீ இங்கேயே இரு... அவனும் வேணாம். அவன் தொடுப்பும் வேணாம்..." என்று கூறி விட்டாள். கனகு வுக்கு இப்போது கொஞ்சம் நிம்மதியாய் இருந்தது.

அவனும் வேண்டாம். அவன் சங்காத்த மும் வேண்டாம் என்று அவனை வெட்டி விட்டாலும் அவனது உயிர் - உறவுக்கு ஆதா ரமாய் இருந்து கனகுவின் வயிற்றில் வளர்ந்தது. காமாட்சி நடந்ததை மறந்து, திரும்ப கனகுவை அவனோடு சேர்த்து வைக்கப் போன போது அவன் பேசின பேச்சு காமாட்சியை கூசிப் போகச் செய்தது... "வேணாம்டி... தெரியாத் தனமா அவன் மூஞ்சில முழிச்சிட்டேன்..." என்று கூட்டி வந்து விட்டாள்.

"யம்மாவ்... எனக்கென்ன குழந்தை பிறக்கும்?" என்று கேட்டாள் கனகு.

"எது பிறந்தா என்னடி.. இந்தக் காலத்துல எந்தக் குழந்தை பிறந்தாலும் ஒண்ணுதான்."

"யம்மா.. பொட்டப்புள்ள பிறக்கக் கூடாதும்மா. நானும் நீயும் நாய்பட்ட கஷ்டம் பட்டாச்சு... நமக்கெதுக்கும்மா பொட்டச்சி பிறக்கணும்... நம்மள மாதிரி அவஸ்தைப் படவா..." என்று கேட்டாள்.

காமாட்சி டீ ஆற்றினவாறே சொன் னாள்... "அம்மாடி... பொட்டக் குழந்தைய ஏன் வேணாம்னு சொல்லணும். நீயோ நானோ பாவம் பண்ணினோமா.. நீ உன் புருஷன்கிட்டேயும், நான் உன் அப்பன்கிட் டேயும் அடிபட்டோம். அது நாம பண்ணின தப்பினால் கிடையாது. அவனுங்க கொழுப் பெடுத்துப் போயி, பண்ணினதுக்கு நாம என்ன பண்றது.. இல்ல உன் வயத்துப்புள்ள தான் என்ன பண்ணினது? இன்னும் சொல் லணும்னா... பொம்பளைப் பிள்ளைதான் பொறக்கணும்னும் சொல்வேன்... ஆம்பளைப் பய பிறந்தா உம் புருஷன் மாதிரியோ, இல்ல- என் புருஷன் மாதிரியோதான் வருவான். நாளைக்கு அவன்கிட்டேயும் நீயும் நானும் அடிவாங்க வேண்டி வரும்.

"என் வயத்துல, உன் வயித்துல மண்ணை அள்ளிப் போட்ட மாதிரி நாளைக்கு இன் னொருத்தி வயத்துல இவன் மண் அள்ளிப் போடுவான். எதுக்கு அது... பொட்டக் குழந்தையே பிறக்கட்டும்.. நம்ம டாக்டரம்மா தன் குழந்தைகளை வளர்க்கிற மாதிரி வளர்ப் போம். அரை வயித்துக் கஞ்சிய நாம குடிச்சு, அத கரை சேர்ப்போம். எவன் எவனோ நம் மள அடிச்சுத் தின்னான். நம்ம குழந்தை திங்கறதுல என்ன தப்பு..." என்ற காமாட்சி கடைசியாய்ச் சொன்னாள்.

"நாம பாவம் பண்ணினவங்க இல்ல... பாவப்பட்டவங்க. பாவப்பட்டவங்களா இருக்கலாம். பாவம் பண்ணுறவங்களா இருக் கக் கூடாது" என்று அம்மா சொல்வதில் நியாயம் இருப்பதாய்த் தெரிந்தது கனகுவுக்கு.

கனகுவுக்குத் திரும்ப வலி எடுத்தது.

இப்போது 'பொம்பளைப் புள்ளதான் பிறக்கணும்' என்று மடப்புரம் அம்மனை வேண்டிக் கொண்டாள் கனகு.



## தமிழை ரசிக்கும் ஷேக்ஸ்பியர்!

படத்தில் ஷேக்ஸ்பியர் எதற்கு ஹெட்ஃபோன் மாட்டிக் கொண்டி ருக்கிறார்? அவருடைய ஒதல்லோ நாடகத்தின் தமிழ் வடிவத்தைக் கேட்டு மகிழத்தான்!

இவ்வாண்டு மூன்று மாதங்களுக்கு பி.பி.ஸி. ஷேக்ஸ்பியர் விழா கொண்டாடியது. அந்த மகாகவி தொடர்பான பல நிகழ்ச்சிகளை உலக மொழிகள் பலவற்றிலும் ஒலிபரப்பியது. "தமிழோசை"யில் ஏற்கெனவே சங்கரமூர்த்தி பல நாடகங்களைத் தமிழாக்கம் செய்து ஒலிபரப்ப உதவி யுள்ளார். இவ்வாண்டு ஒதல்லோ ஒலிபரப்பில் ஒரு விசேஷம், இங்குள்ள பண்பட்ட நடிகர்கள் பலரைப் பயன்படுத்திக் கொள்ள பி.பி.ஸி. முன் வந்ததுதான். பூர்ணம், டெல்லி கணேஷ், பாத்திமா பாபு, அனுராதா மற்றும் பலர். இங்கேயே ஒலிப்பதிவு செய்து லண்டனுக்குக் கொண்டு போனார் தயாரிப்பாளர் ஹெதர்பாண்ட் அம்மையார். பதினைந்து பகுதிகளாக ஜூன் 29 முதல் புதன் கிழமை தோறும் இலக்கிய அன்பர்கள் கேட்டு ரசிக்கலாம்.





“சனிக்கிழமையும் ஞாயித்துக் கிழமையும் பரவாயில்லீங்க. மத்த நாள்ல சேல்ஸ் டல்லு தான்!” என்றார் சேலம் அம்மாப்பேட்டை கைத்தறி நெசவாளர் சங்க நிர்வாகி ரேகலண்ட்.

இடம் : சென்னை - எழும்பூர் பாந்தியன் சாலை கைத்தறிக் கண்காட்சித் திடல். கிழமை: புதன். நேரம் : மாலை.

நுழைவு வாயிலின் இருபுறமும் உள்ள முதலமைச்சரின் பளபள கட்-அவுட்டுகளுக்குக்





கூட கைத்தறிச் சேலை கட்டியிருந்தார்கள். நாம் போயிருந்த போது திடலில் கூட்டம் அதிகம் இல்லை. ஒவ்வொரு ஸ்டாலிலும் இரண்டு பேர், மூன்று பேருக்கு மேல் இல்லை. கைத்தறி ரக வேட்டி, புடைவை களை வாங்கிக் கொண்டு கூட்டம் கூட்ட மாகப் போகும் பெண்மணிகள் (அல்லது அவர்களுக்காகச் சுமக்கும் ஆண் மணிகள்) மிஸ்ஸிங்.

"பள்ளிக்கூடம் திறக்கிற சீசன். அதுவு மில்லாம பதிமூணாம் தேதியன்னிக்கு எக்ஸி பிஷன் ஆரம்பிச்சு இருபத்தேழாம் தேதிக்கு ஏறக்கட்டினா, கூட்டம் எப்படி வரும்?" என்பதுதான் பல ஸ்டால்களிலும் காதில் விழுந்த 'கமெண்ட்'.

வழக்கமாக ஏப்ரல் - மே மாத விடுமுறை சமயத்தில் நடத்தப்படும் கைத்தறிக் கண் காட்சி, இந்த முறை ஜூன் மாதத்திற்குத் தள்ளிப் போடக் காரணம், நாம் கேள்விப் பட்ட வரை, நெசவாளர் கூட்டுறவுச் சங்க ஊழியர்கள் ஏப்ரல் மாதம் ஸ்ட்ரைக் செய்வ தாக அறிவித்ததுதான்.

"நெசவாளர்களைப் பொறுத்தவரை பரவாயில்லை. கூலியும் நியாயமாகக் கொடுத்து, வீடுகளும் கட்டிக் கொடுத்திருக் கிறார்கள். ஊழியர்களுக்குத்தான் சம்பளம் ரொம்பக் கட்டை. 300 ரூபாயிலிருந்து 1400 வரைதான் அதிகபட்சமே. 25 வருஷ ஊழியத் துக்குப் பிறகு இத்தனைதான் சம்பளம் என்

# காசு இல்லாத போதா கைத்தறிக் கண்காட்சி?





நால் எப்படி காலம் தள்ள முடியும்?" என்கிறார் ரேகலண்ட்.

நூல் தட்டுப்பாடு காரணமாக பிரச்னை முன்னே எழுந்தது, இப்போது அடங்கி விட்டதாம். நூலைத் தனியாருக்கு, விசைத் தறிக்குத் திருப்பி விட்டதும், பருத்தியை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்ததும்தான் ஆரம்பத்தில் பிரச்னை உருவாகக் காரணமாம்.

குஜராத், பூர்பஸ்ரீ, ஹரியானா ஸ்டால்களில் சுமாரான கூட்டம் இருக்கத்தான் செய்தது. 'கலம்காரி' படுக்கை விரிப்புகள் 65 ரூபாய்க்குக் கிடைத்தன. தலையணை உறை, விரிப்புகள், குர்த்தா, மெத்தென்ற டோர்மேட் (கால்மிதி) என்று ஏராள ஐட்டங்கள். ஒரேயடியாக வர்ணங்களின் வாரியிறைப்பு.

"இந்த வருடம்தான் முதலில் வருகிறீர்களா இங்கே ஸ்டால் எடுக்க?" என்று கேட்ட போது, "சாப், ஜரா ஹிந்தி மே பூச்சியே!" என்று பணிவாகக் கேட்டுக் கொண்டார் ஹரியானாக்காரர். சரி என்று ஹிந்தியிலேயே 'பூச்சி'னோம் :

இதுதான் முதல் தடவையாம். விற்பனை நன்றாகவே இருக்கிறதாம். 365 சொசைடிகளில் 40, 50 உறுப்பினர் வீதம் இருக்கிறார்களாம். பானிபட்டில்தான் இந்த நெசவாளர்கள் அதிகமாம். (சரித்திர காலத்தில் சண்டை போட்டது போக, இன்றைக்குத் தறி போட்டுக் கொண்டிருக்கிறார்கள் போல!)

கடைசியாக ஜே. வி. சிங் சொன்னது தான் கேட்கக் கஷ்டமாயிருந்தது.

"வந்ததிலேருந்து எங்களுக்குச் சாப்பாடு தான் சரிப்படலே!"

மேற்படி வடக்கத்தி ஸ்டால்களில் உயர் மட்ட, உயர்மத்தியதர மக்களே பெரிதும் காணப்பட்டார்கள். அதிலும் அவரவர் ஊர்க்காரர்களே அதிகம்.

சென்னிமலை தொழிலியல் நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் ஸ்டாலில் படுக்கை விரிப்பும், தலையணை உறையும், டெர்ரி டவலும் பல வண்ணங்களில் பார்வையைச் சுண்டி இழுத்தன. சொந்தத் தறி இல்லாத நெசவாளர்களுக்கு என்றே ஆரம்பிக்கப் பட்டதாம் இச் சங்கம். காலை 7 மணிக்கு வேலைக்கு வந்து விட்டால் ஒவ்வொருவருக்கும் தறி ஒதுக்கப்படுமாம். ஐந்தரை மணிக்குக் கூலியை வாங்கிக் கொண்டு வீட்டைப் பார்த்து நடையைக் கட்டலாம்.

"எக்ஸ்போர்ட் எல்லாம் நீங்கள் பண்ணுவதுண்டா?"

"கோவாப்டெக்ஸ்தான் பண்ணும். நாங்க அவங்ககிட்ட கொடுத்துருவோம்!"

சேலம் ஸ்ரீராஜகணபதி பட்டு கைத்தறி நெசவாளர் சங்க ஸ்டாலில், சௌந்தரராஜன் சொன்னார் :

"சேலத்தில் நல்ல டிமாண்ட் இருக்கிறது. 50 தறிகள் இப்போது ஓடுகின்றன அங்கே."

சுமார் இரண்டு அங்குல ஜரிகைக் கரை போட்ட மயில்கண் பட்டு வேஷ்டி படு அமர்க்களமாய் இருந்தது. மூன்று நாட்கள் ஆகுமாம் நெய்ய. இரண்டு ஆட்கள் வேலை செய்வார்களாம். ஒரு பட்டு வேட்டியின் கூலி மட்டும் 380 ரூபாய் ஆகிறதாம். (அப்புறம் நாம் ஏன் விலையைக் கேட்கப் போகிறோம்?) இந்த மாஸ்டர் - வீவர்ஸ் எனப்படும் சிறப்பு நெசவாளர்கள் நல்ல ஊதியம் பெறுவதுடன், குரூப் இன்ஷூரன்ஸ் வசதியும் பெறுகிறார்களாம்.

காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் பட்டு கூட்டுறவுச் சங்க ஸ்டாலில், "இது கல்யாண சீசனும் இல்லை, பண்டிகை சீசனும் இல்லை. பள்ளிக்கூடம், காலேஜ் திறந்து எல்லோரும் பணத்துக்குத் தவிச்சுக்கிட்டிருக்காங்க. அதனாலதான் கூட்டம் குறைச்சல்!" என்றார்கள்.

நியாயமானதாகவே தெரிந்தது.

தீபாவளி, பொங்கல் சமயங்களில் வழங்கப்படும் இலவச வேட்டி, சேலைகளைக் கூட ஆந்திராவிலிருந்தும், வங்காளத்திலிருந்தும் வாங்கி, அதை மறைக்க, இங்கே உள்ளூர் போலி விலாசங்கள் கொடுக்கப்பட்ட செய்தி பத்திரிகையிலும் வெளியாகியிருந்தது.

போதாக்குறைக்கு இப்போது கண்காட்சிச் சிறப்பு விற்பனையும் சொல்லிக் கொள்ளும்படியாய் இல்லை.

'கோ-ஆப்டெக்ஸ்' நிறுவன மானேஜிங் டைரக்டர் வீனா நாயர் ஐ.ஏ.எஸ்.ஸை விசாரித்தோம்.

"ஏன் இந்த முறை கண்காட்சியை ஜூனுக்குத் தள்ளிப் போட்டீர்கள், ஏப்ரலில் நடத்தாமல்?"

"ஐ டோன்ட் நோ." மெலிதான சிரிப்பு.

"எல்லா வருடமும் இனி ஜூனில் தானா?"

"ஐ ஜஸ்ட் டோன்ட் நோ." இன்னும் கொஞ்சம் சிரிப்பு.

"இந்த எக்ஸிபிஷனையே ஜூலை முதல் வாரம் வரை நீட்டிப்பீர்கள் என்று பேசிக் கொள்கிறார்களே?"

"ஐ ஆம் சாரி, ஐ டோன்ட் நோ."

"நீங்கள்தானே கோ-ஆப்டெக்ஸ் எம்.டி.?"

பலத்த சிரிப்பு.

**- எஸ்.வி.என்.**

வண்ணப்படங்கள் : **யோகா**

# என் கடவுளுக்கு நைவேத்தியம் காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து இஷ்ட்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹமைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு காந்தி நகர், அடையாறு

சென்னை-20 போன் : 412557

Ad-Ventures

**சென்ற இதழில்...**

**வெளிநாட்டிலிருந்து வேதபுரத்துக்கு விஜயம் செய்யும் அபூர்வா - பூர்வீக வேதபுரவாசி - அந்நாட்டைப் பற்றி ஒரு நூல் எழுத விரும்புகிறாள். அவள் குடியிருக்கும் வீட்டுக்காரர் கலியமூர்த்திக்கு, இரண்டு மனைவிகளிருந்தும், சிறு வயதிலிருந்தே இருந்து வரும் பலகீனத்தைக் கட்டுப்படுத்த முடியாமலிருந்த காரணத்துக்காக, அபூர்வாவால் கண்டிக்கப்பட்டு, மன்னிப்புக் கோருகிறார். அபூர்வா கலியமூர்த்தியின் கட்சித் தலைவரை அன்று மாலை பார்க்க இருக்கிறாள்.**

*'நாட்டுத் தலைவனென்றால், கடவுள் போல், எல்லாருடைய கண்ணுக்கும் புலனாகாமல் இருக்க வேண்டும். உற்சவமூர்த்தி போல், அத் தலைவருக்கு ஒரு 'டூப்' (Dupe) இருந்தாலும் தவறில்லை*

*(கட்சித் தொண்டர், 'தலைவர் அடிப்பொடி சுவாமிநாத குருக்கள்' - காலம், அறுதியிட்டுக் கூற முடியவில்லை)*

உள்ளே விரைந்த கலியமூர்த்தி ஃபோனை எடுத்தார்.

# வேதபுரத்து வியாபாரிகள்

2

"வணக்கங்க... அவங்களா, இருக்காங்க... கொடுக்கிறேன்!" அவர் ஃபோனை அபூர்வாவிடம் கொடுத்தார்.

"சரி... அஞ்சு மணிதானே. நன்றி."

அப்பொழுது மாடியிலிருந்து பெட்டி வீசி எறியப்படும் சப்தம் கேட்டது.

கலியமூர்த்தி மாடிக்கு விரைந்தார்.

"ஏ, முண்டம், நான் வெளையாட்டுக்குச் சொன்னா, அம்மா பெட்டியை இப்படி வீசியா எறிவாங்க? போய் எடுத்தாடா..." என்று கத்தினார் கலியமூர்த்தி.

கண்ணப்பன் ஒன்றும் புரியாமல் அபூர்வாவையும் கலியமூர்த்தியையும் மாறி மாறிப் பார்த்தான்.

இந்தப் பெண்ணிடம் ஏதோ மந்திரசக்தி இருக்க வேண்டும் என்று தோன்றிற்று கண்ணப்பனுக்கு.

"உங்க வீட்டுக் கூடம் விக்கிரமாதித்ய சிம்மாசனம். உங்க ஐயா கொல்லக் கட்டிலிருந்து அங்கே வந்தார்னா மனசு மாறிடும்..." என்றாள் அபூர்வா.

"என்ன சொல்றீங்க?" என்றான் கண்ணப்பன்.

"சொல்றாங்க, சுரக்காய்க்கு உப்பில்லேன்னு. போய் பெட்டியை எடுத்துட்டு வாடா..." என்றார் கலியமூர்த்தி கோபத்துடன்.

கண்ணப்பன் கீழே இறங்கிச் சென்றான்.

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது.

பிறகு, தொண்டையைச் சிறிது செருமிக் கொண்டு, கலியமூர்த்தி சொன்னார். "தலைவர்கிட்டே இதைப் பத்திச் சொல்ல வேணாம்."

"நான் இந்த வீட்டை விட்டுக் காலி பண்ணிட்டுப் போகப் போறேன்..."

"என்னங்க சொல்றீங்க? அதெல்லாம் வேணாம். இனிமே என்னாலே உங்களுக்கு ஒரு தொந்தரவும் இருக்காது. நான் செய்தது தப்புதான். சின்ன வயசிலிருந்து ஏற்பட்ட ஒரு பலகீனம், மாத்திக்க முடியலே. சத்தியமா சொல்றேன், இந்த மாதிரி இனிமே நடக்காது..."

"உங்களை எப்படி நான் நம்பறது?"

"கால்லே விழட்டுமா? தப்புப் பண்ணிட்டேன், வயசு வித்தியாசம் பெரிசில்லே."

"இது நீங்க எல்லாருமே சொல



பமா செய்யக்கூடிய காரியம்... நீங்க காலிலும் விழ வேணாம், கையிலும் விழ வேணாம். எனக்குச் சௌகர்ய மான வீட்டைப் பாத்திட்டு நான் போறேன்."

"இந்த வீட்டுக்கு என்ன சௌகர் யம் குறைச்சல், சொல்லுங்க... தலை வர்கிட்டே இதை மட்டும் சொல்லி டாதீங்க... கெஞ்சிக் கேட்டுக்கறேன்."



"ஏன் இப்படிக் கெஞ்சறீங்க, எனக்குப் புரியலியே. உங்க கட்சியிலே இது பெரிய தப்பாவா நினைக்கப் போறாங்க?" என்றாள் அபூர்வா சிறிது ஆச்சர்யத் துடன்.

"அப்படியில்லீங்க... வெளிநாட்டுலேர்ந்து வந்திருக் கிறவங்ககிட்டே இப்படி நடந்துகிட்டிருக்கக் கூடா தில்லையா? இந்த விஷயத்திலே கட்சியிலே ஒரு கட்டுப்பாடு இருக்குங்க..."

"ஓ! அதுதான் தப்பா?" என்று சொல்லிக் கொண்டே புன்னகை செய்தாள் அபூர்வா.

"ஆமாங்க..."

"சரி... நீங்க போகலாம். நான் குளிக்கணும்."

கலியமூர்த்தி தலையைத் தொங்க போட்டுக் கொண்டே அறையை விட்டு வெளியேறினார். அவரைப் பார்க்க அபூர்வாவுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது.

கண்ணப்பன் பெட்டியைக் கொண்டு வந்து அறையில் வைத்தான்.

அவன் அவளை ஒன்றும் புரியாமல் பார்த்துக் கொண்டே வெளியே சென்றான்.

அவள் குளித்து விட்டு மாற்றுடை தரித்து வெளியே போகத் தயாராக இருந்த போது, வாசல் மணி ஒலித்தது.

திறந்தாள்.

கலியமூர்த்தியின் 'மனைவி'!

"வாங்க..." என்று அவளை உள்ளே அழைத்தாள் அபூர்வா.

"நீங்க சொன்னபடி காலி செய்திட்டுப் போயி டுங்க. கௌரவமான பெண்களுக்கு இந்த இடம் சரி யில்லே..."

"இனிமே அந்த மாதிரி நடந்துக்க மாட்டாருன்னு நினைக்கிறேன்."

"வேற பல வகையிலே தொந்தரவு செய்வாரு. இவங்களையெல்லாம் எனக்கு நல்லாத் தெரியும். நான் சினிமாலே கதாநாயகியா வரணும்னு வந்தேன். ரெண்டு மூணு கை மாறி இப்போ இவர்கிட்டே ஆசை நாயகியா இருக்கேன். தனியா இருக்கிறது நல்லதில்லே. வெளிநாட்டிலேர்ந்து வந்திருக்கீங்க, தங்க வேற நல்ல இடமா கிடைக்கலியா?"

"என்னை எனக்குக் காப்பாத்திக்கத் தெரியும், பயப்படாதீங்க... உங்க வீட்டுக்காரர், நடுங்கிச் சாக றாரு. நான் கட்சி வட்டாரத் தலைவர்கிட்டே இன் னிக்கு நடந்ததைச் சொல்லிடுவேனோன்னு..."

"அந்த ஆளும் இவர் மாதிரிதான். எரிகிற கொள்ளி யிலே எது நல்லதுன்னு முடிவு செய்யற விவகாரந்தான் இது. நெறைய ஹாஸ்டலிருக்குதே, அங்கே போய்த் தங்க முயற்சி பண்ணுங்களேன்..."

"இந்த நாட்டைப் பத்தி நல்லா தெரிஞ்சாக ணும்னு நான் வந்திருக்கேன். நல்லவங்களும் இருப் பாங்க, கெட்டவங்களும் இருப்பாங்க, பயந்து ஓடறதா

நல்லது? சொல்லுங்க..."

"அப்புறம் உங்க இஷ்டம், சொல்றதைச் சொல்லிட்டேன்" என்று கூறிக் கொண்டே கீழே செல்ல அவள் முற்பட்டாள்.

"அவர் இல்லியா, வீட்டிலே?"

"இல்லே அவசரமா புறப்பட்டுப் போயி ருக்கலாம், முன்ஜாக்கிரதையா, உங்களைப் பத்தி ஏதாவது சொல்லி வைக்க... சரி, நான் வரேன்."

அவள் போய் விட்டாள்.

அபூர்வா அந்த வீட்டுக்குக் குடி வந்ததே ஓர் யதேச்சையான சம்பவம். அவள் வேதபுரத்துக்கு வந்த புதிதில் ஒரு ஹோட்ட லில்தானிருந்தாள். நல்ல ஹோட்டல்தான். ஆனால் அவளுக்குச் சற்று அலுத்து விட்டது.

ஒருநாள் அவள் தெருவில் ஓரிடத்தில் நின்று கொண்டு, டாக்ஸிக்காகக் காத்திருந் தாள்.

ஒரு கார் அவளருகே நின்றது.



**வாழ்க்கை**

நல்ல வாழ்க்கை வாழ
வேலை தேடினேன்
வேலை தேடுவதே
வாழ்க்கையாகிப் போனது!

- எஸ். சுப்பிரமணியன்

"எங்கே போகணும்?"

அவள், தான் தங்கியிருந்த ஹோட்டல் பேரைச் சொன்னாள்.

"ஏறுங்க... நான் போற வழிதான்."

வண்டியில் ஏறிய பிறகு, அவர் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். கலியமூர்த்தி.

"நீங்க என்ன 'ஸ்க்ரீன் டெஸ்ட்'டுக்காக வந்திங்களா?"

" 'ஸ்க்ரீன் டெஸ்டா?' "

"ஆமாம். நீங்க ஸ்டுடியோ வாசல்லே நின்னுக்கிட்டிருந்தீங்களே?"

"அது ஸ்டுடியோ வாசலா, எனக்குத் தெரியாது."

"உங்களுக்கு நல்ல முகவெட்டு. சினி மாலே சேரணும்னா சொல்லுங்க, சேர்த்துட றேன்."

"நீங்க என்ன 'புரொடியூசரா'?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. எல்லா ரும் நம்ம சிநேகிதக்காரப் பசங்கதான்."

"நான் வெளிநாட்டிலேர்ந்து வந்திருக் கேன், உங்க ஊரைச் சுத்திப்பாக்க..."

"இந்த ஹோட்டலிலா தங்கியிருக்கீங்க?"

"ஆமாம்..."

"எத்தனை நாளா?"

"ஒரு மாசமா...?"

"எக்கச்சக்கமா ஆகுமே செலவு. பேசாமே நம்ம வீட்டுக்கு வாங்க. மாடி காலியா இருக் குது."

"நீங்க என்ன செய்யறீங்க?"

"அரசியல், வியாபாரம்."

"அரசியல் வியாபாரமா? அப்படின்னா?"

"இல்லீங்க, அரசியல் சுமா வியாபாரம். ரெண்டு சினிமா கொட்டா இருக்குது. கள்ளுக் கடை ஏலம் எடுத்திருக்கேன். ஏதோ சுமாரா வருது. ஆமா நீங்க நல்லா எங்க பாஷை பேசறீங்களே, எப்படி?"

"அதான் தாய்மொழி. ஆனா பிறந்து வளர்ந்ததெல்லாம் அந்த நாட்டிலே."

"அதான் ஒரு ஃபாரின் களை உங்க முகத்திலே தெரியுது."

"அதெப்படி இருக்கும்?"

"சேப்பா, ஜோரா..."

"நீங்க கறுப்பாத்தான் இருக்கீங்க, எனக்கு நல்லாயிருக்கிறதா படுது."

"சும்மா சொல்றீங்க, நான் நல்லாவா இருக்கேன்... சரி, என் வீட்டுக்குக் குடி வர்றீங்களா?"

அவள் இதை நினைத்துப் பார்த்தாள். என்றாவது ஒருநாள் அவர் அசட்டுத்தனமாக மாட்டிக் கொள்வாரென்றும் அவளுக்குத் தெரியும்.

இது ஒரு சுவாரஸ்யமான அனுபவம். எழுதுவதற்கு இன்னும் எத்தனை விஷயங்கள் இருக்கப் போகின்றனவோ?

வேதபுரத்தில் அரசியல், சினிமா, வியா பாரம் எல்லாம் ஒன்றுதான்...

அபூர்வா அன்று மாலை கட்சி வட்டாரத் தலைவர் வீட்டுக்குப் போன போது, அவளுக்கு ஆச்சர்யம் காத்திருந்தது.

அங்கே கலியமூர்த்தி இருந்தார்.

"வணக்கம், வாங்க. என்ன நம்ம சிநே கிதர் வீட்டிலேதான் இருக்கீங்களாமே, இவரு காலையிலேதான் சொன்னாரு..." என்றார் வட்டாரத் தலைவர்.

அவர் பெயர் தம்புசாமி.

"அம்மா, நல்லா படிச்சவங்க... வெளி நாட்லே பொறந்து வளர்ந்தவங்க, என்னமா நம்ம மொழி பேசறாங்க, ஆச்சர்யமா இருக்கு" என்றார் கலியமூர்த்தி.

அபூர்வா மௌனமாக சோபாவில் உட்கார்ந்தாள்.

"என்ன குடிக்கறீங்க? வெளிநாடுன்னா..." என்று சொல்லி விட்டு நிறுத்தினார் தம்பு சாமி.

"ஒண்ணும் வேணாம்."

"காப்பி கொடுங்க... குடிப்பாங்க..." என்றார் கலியமூர்த்தி.

"எது வேண்டுமானாலும் குடிக்கலாம். நானும் ஒரு 'சோஷல் ட்ரிங்கர்'தான்..." என்றார் தம்புசாமி சிரித்துக் கொண்டே.

"குளிர்ந்த தண்ணி கொடுங்க போதும்" என்றாள் அபூர்வா.

"டேய்... கொஞ்சம் 'ஜில்'னு தண்ணி கொண்டாலே..." என்றார் தம்புசாமி.

"ஹூம், சொல்லுங்க... என்ன விஷயமா என்னைப் பார்க்கணும்னீங்க...?"

"உங்க கட்சியைப் பத்தித் தெரிஞ்சுக்க லாம்னுதான்."

"ஏன் கலியனே இருக்காரே, இவரே நல்லா சொல்லுவாரே..."

ஒரு பையன் ஒரு தட்டில் மூன்று கண்ணாடித் தம்ளர்களில தண்ணீர் கொண்டு




வந்தான்.

"அவருக்கு எங்கே 'டயம்' இருக்கு? கடை, கண்ணி, வீடு, குழந்தைங்க..."

"ரெண்டு வீடு, அதைச் சொல்லுங்க," என்று கூறி விட்டுச் சிரித்தார் தம்புசாமி.

கலியமூர்த்திக்கு இது பிடிக்கவில்லை. அவர் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார்.

"நீங்க முழுநேர அரசியல்வாதி... அத னாலே..."

"அப்படியில்லீங்க... எனக்கும் பிஸினஸ் இருக்குது."

"என்ன பிஸினஸ்?"

"ஏற்றுமதி - இறக்குமதி... ஆமாம், நீங்க வெளிநாட்டுக்காரங்க... எங்க பிஸினஸ் விஷயமா உதவி செய்யலாமே..."

"நீங்க என்ன ஏற்றுமதி இறக்குமதி செய்ய றீங்க?"

"எல்லாம்... குண்டூசியிலிருந்து, யானைக் குட்டி வரைக்கும்... நம்ம சகலைதான் இங்கே அரசாங்கத்திலே இன்டஸ்ட்ரீஸ் செக்கரட் டரி."

"அப்படியா?"

"ஆமாம், சொல்லுங்க, உங்களுக்கு என்ன உதவி வேணும்னு, உடனே செய்யறேன்..."

"எனக்கு உங்க கட்சியைப் பத்தித் தெரிஞ் சிக்கணும், நான் இங்கே வியாபாரம் செய்ய வரல்லே..."

"என்ன அப்படிச் சொல்றீங்க? உங்க அப்பா, அம்மா, உங்க ஊர்லே இருக்காங் களா? அவங்க என்ன செய்யறாங்க...?"

"எங்கப்பா 'ப்ரொஃபஸர்', அம்மா டாக்டர்..."

"ஒண்ணு கல்வி வியாபாரம், இன் னொண்ணு, உடல்நல வியாபாரம். இதோ பாருங்க, என் தத்துவமே இதுதான், உலகத் திலே எல்லாமே வியாபாரந்தான்."

"நீங்க சொல்றதை மிஸ்டர் கலிய மூர்த்தி ஒப்புத்துக்குவாரா? அவரை அன்னிக் குக் கேட்டேன், 'என்ன செய்யறீங்க'ன்னு அரசியல், வியாபாரம்னாரு... 'அரசியல் வியா பாரமா'ன்னு கேட்டேன். உடனே, 'அரசியல் சுமா வியாபாரம்'னு கோவத்தோட சொன் னாரு."

"அப்படியா, இதெல்லாம் ஒப்புத்துக்கிற துக்கும் ஒரு துணிச்சல் வேணும். இப்பொ எவன்தான் வியாபாரம் செய்யலே, சொல் லுங்க. ஆன்மீக வியாபாரம் நடக்கலியா? வியாபாரம் நடத்தாமெ பொளைக்கிறது எப்படி? நான் இந்தக் கட்சியிலே சேர் றப்போ, எங்க ஐயா சொன்னாரு, 'இதோ பாரு தம்பு, கட்சியினாலே உனக்கென்ன லாபம், உன்னாலே கட்சிக்கு என்ன லாபம்னு கணக்குப் போட்டுப் பாரு. உன் பக்கத்திலே தராசுத் தட்டு இறங்கிடிச்சுன்னா, கட்சிக்காக உசிரைக் கொடு. இல்லாட்டி உன்னைப் பொளைக்கத் தெரியாதவன்னுதான் சொல்லு வேன்'னாரு. பொன்னான வார்த்தை... என்ன சொல்றீங்க?"

"கரெக்ட்... வேதபுரத்திலேதான் இந்த மாதிரி ஞானவான்லாம் உண்டுன்னு நான் கேள்விப்பட்டிருக்கேன். சரி... உங்க தலை வரை நான் பார்க்க முடியுமா?"

"எந்தத் தலைவரை?"

"கட்சியோட பெரிய தலைவரை, நாட்டுப் பெரியவரை..."

"வெளையாடறீங்களா? நானே பார்த்த தில்லே. அப்படி ஒரு தலைவர் இருக்கா ருன்னு நம்பிக்கையிலே நாங்க வாழ்ந்துக்கிட் டிருக்கோம்... அவரு ஒரு கடவுள் மாதிரிங்க... அவரை யாரும் பார்த்ததில்லே" என்றார் தம்புசாமி.

(தொடரும்)





# நாராயணன் புகழ்பாடும் நான்கு நூல்கள்

## -முன் வெளியீட்டுத் திட்டம்

**நயவுரை நம்பி டாக்டர் எஸ். ஜெகத்ரட்சகன்**

**எழுதிய**

★ **அஷ்டப்பிரபந்தம்**

தெளிவுரை

★ **குருபரம்பரைப் பிரபாவம்**

அழகிய இனிய எளிய பழகுதமிழ் நூல்

★ **திருக் கோளூர் பெண் பிள்ளை இரகசியம்**

தத்துவக் கதைகள்

★ **செந்தமிழ் இலக்கியத்தில் திருமால்**

(காலந்தோறும் கண்ணன்)

ரூ 200-க்குரிய நான்கு நூல்களை 30.8.'94-க்குள் ரூ 150-க்குத் தருகிறோம். M.O. / D.D அனுப்புக. (அஞ்சல் செலவு ரூ 15) நூல்கள் வெளிவரும் நாள் 8.10.'94 - புரட்டாசி 22. 3வது சனிக்கிழமை.

விற்பனையில்

**நாலாயிர திவ்வியப் பிரபந்தம் நயவுரை ரூ 300/-**

கழிவு 20%

**ஆழ்வார்கள் ஆய்வு மையம்**

29, திலக் தெரு, தியாகராய நகர், சென்னை - 600 017. தொலைபேசி - 8251865



"அம்மாவுக்கு ரோஜாப்பூ வேண்டாம்!" என்கிறார் அர்ச்சகர்.

'அம்மா'வுக்கு ஏற்ற, அவள் விரும்புகிற மலர்கள் இரத்தச் சிவப்பில் உள்ள செம்பருத்தி, தாமரை, சிவப்பு அரளி இந்த மூன்றும்தான். வெள்ளை நிற மலர்கள் இங்கே பொருந்துவதில்லை. இருப்பினும் பக்தர்கள் காணிக்கையாக வழங்குவதை மறுப்பதுமில்லை.

அர்ச்சகர் வடக்கத்திக்காரர், பூஜாரி! கல்கத்தா, தக்ஷிணேசுவரில் உள்ள காளி பாரி என்னும் காளி கோவிலின் நகல்தான் இந்த மாம்பலம் கோவில்; கொஞ்சம் மாற்றங்களுடன்!.

வெளியே தொங்குகிற சிவப்பு நாக்கோடு நல்ல கறுப்பு உருவம் காளி மாதா. அழகான கண்கள், தோற்றத்தின் உக்கிரத்தைத் தணிக்கின்றன.

"அம்மா நின்று கொண்டிருப்பது சிவன் நெஞ்சில் ஒரு காலும், தொடையில் ஒரு காலுமாய்... இப்படிக் கிடந்த நிலையில்தான் சர்வேசுவரன் அம்மாவின் கோபத்தைத் தணிக்க வேண்டியிருந்தது" என்கிறார் பூஜாரி.

அர்ச்சகருக்கும் ரத்தச் சிவப்பில் ஆடை. அம்மாவின் சந்நிதியில் எல்லாமே சிவப்புத்தான். அம்மாவின் இடக்கரத்தில் ஓங்கிய நிலையில் ஒரு வெட்டரிவாள். இன்னும் ஓர் இடக் கரத்தில் வெட்டப்பட்ட அரக்கனின் தலை. வலக்கரம் இரண்டிலும் அபய-வரத முத்திரை. அம்மாவின் இருபுறமும் சிறிய உருவில் ஊளையிடும் நரிகள். அம்மா ஸ்மசான தேவதை அல்லவா? இந்த அம்மாவின் திருநாமம் பவதாரிணி!

# உக்கிரகாளி: அமைதி தவழும் திருத்தலம்!

தக்ஷிணேசுவர் காளிதேவி ஆலயத்து அர்ச்சகர் ஒருவருக்கு உடல்நலம் சீர்கெட்ட போது, தமக்குப் பதிலாகக் கிராமத்திலிருந்து ஓர் இளைஞனை அனுப்பினாராம், பூஜை செய்வதற்காக. 'மா... மா...' என்று சதாசர்வகாலமும் தன்னையே பறிகொடுத்து, அம்மாவிடம் பக்தி பூண்டிருந்த அந்த இளைஞன்தான் பின்னாளில் ஒரு ஆன்மிக விழிப்புணர்ச்சிக்கே காரணமாக விளங்கிய பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்! இந்த மதராஸ் காளி கோயிலிலும் பகவானின் படம் சந்நிதியில் உண்டு.

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்னால், இந்தக் காளி ஆலயம் ஊர் மக்கள் நன்கொடையில் உருவானது.



• கல்கத்தா போலவே...

அம்மாவுக்கு அபிஷேகம் கிடையாது. ஸ்ரீசக்கரத்துக்குத்தான் அபிஷேகம். தினமும் காலை, நண்பகல், இரவு என்று மூன்று நேர பூஜை வழிபாடு எல்லாம் உண்டு. 'தாந்த்ரிக்' முறையில்தான் அம்மாவுக்குப் பூஜை நியமங்கள். அம்மாவுக்கு முன்னால் சிறு கும்பத்தில் ஆவாஹனம்.

தீபாவளியன்றுதான் மிகவும் விசேஷமான வழிபாடுகள் நடைபெறுகின்றன. இரவு ஒன்பது மணிக்குத் தொடங்கி, நள்ளிரவு தாண்டி அதிகாலை ஒரு மணி வரை இந்தப் பூஜை நீண்டு போகும்.

தென்னாட்டு ஆலயங்களைப் போல் அம்மாவின் திருவுருவைச் சுற்றித் திருவாசி அமைத்திருக்கிறார்கள். மற்றபடி பிராகார தேவதைகள் என்று குறிப்பிட அதிகமில்லை. அம்மாவின் சந்நிதிக்குப் பின்புறம் சிவலிங்கமும், கணபதியும் மட்டும் சிறிய உருவில் காட்சியளிக்கிறார்கள்.

அம்மாவின் பூஜை நேரத்தில் வழக்கமான மரியாதைகளோடு, பெரிய விசிறியால் வீசுகிறார்கள். நீண்ட காம்புடன் கூடிய முழுப் பனை மட்டையில் அப்படியே ஆளுயரத்துக்கு உருவாக்கப் பட்ட விசிறி! கல்கத்தாவிலிருந்து வருகிற விசிறி இது!

இந்த ஆலயம் அறப்பணிகளிலும் ஈடுபட்டுள்ளது. வெளிமாநிலங்கள், வெளிநாடுகளிலிருந்து வரும் அன்பர்களுக்காகப் பெயரளவு கட்டணத்தில் தங்குமிட வசதி - தர்மசாலா உருவாக்கி வருகிறார்கள். கீழ்த் தளத்தில் கல்யாண மண்டபம், முதல் இரண்டாம் தளங்களில் விருந்தினர் இல்லம் என்று பதினான்கு லட்ச ரூபாய் மதிப்பீட்டில் இது உருவாகி வருகிறது.

ஆரவாரங்கள் அற்ற அமைதியான சூழலை விரும்பி, பக்தி ஒன்றை மட்டுமே பிரதானமாய் எண்ணுகிறவர்கள் கண்டிப்பாகக் காண வேண்டிய திருத்தலம் இந்தக் காளி கோயில்.

இந்த பவதாரிணி அம்மாவின் சந்நிதியில் வழங்கப்படுகிற அரக்குச் சிவப்புக் குங்குமப் பிரசாதம் கூட வித்தியாசமான நறுமணத்தோடு இருக்கிறது.

**கமலமனராஜன்**

படங்கள் : **யோகா**

• சிவபெருமான் நெஞ்சிலே...



# வண்ணத்துப்பூச்சி வேட்டை

"லுக் மிஸ்டர்அர்ஜுன், யு நோ மோர் கண்ட்ரோல் மை லைஃப்" என்றேன் அழுத்தமாக. இங்கிலீஷில் சொல்வது சுலபமாக இருந்தது.

அர்ஜுன் ஸ்தம்பித்த நிலையில், நான் எழுந்து வர, என்னைப் பின்தொடர முடியாமல் வெறுமனே விழித்தார்.

## 27

மருத்துவ சாஸ்திரத்தின் அபார முன்னேற்றத்தாலும் அந்த ரஞ்சனி என்ற பெண் கோபத்தில் குத்திய கத்தி, இலக்குத் தவறியதாலும் அர்ஜுன் பிழைத்துவிட்டார். பெரிசாக பாண்டேஜ் போட்டு, சாய்ந்தவாக்கில் அர்ஜுன் படுத்திருக்க, நான் அருகே அவருக்கு ரிஷிபத்தினிபோல் சிசுருஷை செய்தேன். பெட்பேன் வைத்தேன். உடம்பை உல்லன் டவலால் துடைத்துவிட்டேன். ஏன் மூன்று தினங்கள் கழித்து, ஷேவ் கூடப் பண்ணி விட்டேன்.

ஒரு சமயம் அப்படியே அவர் கழுத்தைப் பிடித்து நெரித்துவிடலாமா என்று தோன்றும்போது, மனசுக்குள் 'வேண்டாம், வேண்டாம்' என்று ஒரு குரல் சொல்லிக் கொண்டிருந்தது. 'இன்னும் கொஞ்ச நாள் இன்னும் கொஞ்ச நாள்' என்று ஏதோ என்னை வற்புறுத்தியது. கொஞ்ச நாளில் என்ன நிகழப் போகிறது என்பது தெளிவாக இல்லை. அர்ஜுன் என் பணிவிடைகளைப் பரிவோடு பார்த்துக் கண்ணீர் உகுத்து, கிடைத்த சந்தர்ப்பத்தில் என்னை புஜத்தில் பிடித்துத் தன்பால் இழுத்துக் கொண்டபோது, தீர்மானமாக விலகி நின்றேன்.

"இன்னும் கோபம் போகலியா?" என்றார்.

"மணி எட்டாச்சு. பச்சை மாத்திரை கொடுக்கச் சொல்லியிருக்கா நர்ஸ்."

"ரேகா, எனக்குப் பச்சை மாத்திரையும் வேண்டாம்; சிவப்பு மாத்திரையும் வேண்டாம்; என்னை மன்னிச்சேன்னு ஒரு வார்த்தை சொல்லு, போதும். குணமடைந்து எழுந்து நின்று விடுவேன்!" என்றார்.

"இது மன்னிப்பையெல்லாம் கடந்து போய்விட்ட ஸ்டேஜ்!" என்றேன்.

"எப்படிச் சொல்கிறாய்? புரியவில்லை."

"நான் உங்களுக்கு இந்த மாதிரி மூத்திரம் வார்றது, ஊட்டிவிடுகிறது எல்லாம் வேறு ஆளில்லையேங்கிற ஒரே காரணத்தாலும் இன்னும் நம் இரண்டு பேருக்கும் கல்யாணம்கிற அடையாளம் பாக்கியிருப்பதாலும் தான்."

"டைவோர்ஸ் கேக்கப் போறியா? நான் செத்துப் போய்விடுவேன் ரேகா."

"உங்களுக்கு ஊருக்கு ஊர் பெண்டாட்டி இருக்கறப்ப, ஒரு டில்லி பெண்டாட்டி விலகிப் போனா என்ன போச்சு?"

"பார்த்தியா, பார்த்தியா ரொம்ப மனசைப் போட்டுக் குத்தறே. ரஞ்சனியைப் பத்தி எல்லா விவரமும் தெரிஞ்சுகிட்டப்புறம்..."

"எல்லாம் காயத்ரி சொன்னா."

"காயத்ரி சொன்னதைப் போல அத்தனை சிம்பிள் இல்லை இது. ரஞ்சனி ஒரு மாதிரியான பெண். அவகிட்ட மாட்டிக்கிட்டேன்."

"நீங்க மாட்டிக்கிட்டீங்களா, அவ மாட்டிக்கிட்டாளா, எனக்கு எதிலயும் அக்கறை இல்லை."

"என்ன பண்ணப் போறே?" என்றார், என்னைச் சந்தேகமாகப் பார்த்து.

"சொல்றேன். மாத்திரையைச் சாப்பிடுங்க."

அவருடைய அம்மா ப்ரேமா மாமியும் அக்கா காயத்ரியும் மாற்றி மாற்றி ஷிப்ட் போட்டுக் கொண்டு, காப்பி, கோகோ என்று வீட்டிலிருந்து கொண்டு வந்து கொண்டிருக்க, நான் ஆஸ்பத்திரியிலேயே இருந்தேன், அதே அறையில்.... மற்றொரு கட்டிலில் படுத்து, அங்கேயே குளித்து, மாற்றுப் புடவை

**சுஜாதா**

அணிந்துகொண்டு...

"எப்பேர்ப்பட்ட தங்கமான பொண்ணு இது. என் பிள்ளைதான் கிராதகன். இவ மாதிரி ஒரு மனைவி கிடைக்கக் கொடுத்து வெச்சிருக்கணும். இதை விட்டுட்டு அந்தச் சிறுக்கியை... எங்கதான் புத்தி போறதோ...?" என்று நான் குளித்துக் கொண்டிருந்த போது ப்ரேமா அவரிடம் அதட்டுவது தெளிவாகக் கேட்டது.

எனக்குக் கேட்கும்படியாக அமைக்கப் பட்ட உரையாடல் என்றுதான் அதை நினைத்துக் கொண்டேன்.

மெல்ல மெல்ல அர்ஜுன் குணமாக, நான் ஒரு நாள் வெளியே போக விரும்பினேன்.

"எங்கே போகணும்?"

"உங்ககிட்டே சொல்ல வேண்டிய அவசியமில்லை."

"காயத்ரியைக் கூட வரச் சொல்லட்டுமா?"

"வேண்டாம்."

"ஆபீசிலிருந்து யாரை யாவது?"

"வேண்டாம். நான் தனியாப் போறேன்."

"தனியா உன்னை விட எனக்குப் பயமா இருக்கு, ரேகா. அன்னைக்கு பீச்சில ஆன சம்பவத்துக்கப்புறம்."

"பயப்படாதீங்க. அந்தப் பைத்தியக்காரத் தனமெல்லாம் இனி செய்ய மாட்டேன்."

"எதுக்கும்...?"

"லுக் மிஸ்டர் அர்ஜுன், யு நோ மோர் கண்ட்ரோல் மை லைஃப்" என்றேன் அதட்டலாக. இங்கிலீஷில் சொல்வது சுலபமாக இருந்தது.

அர்ஜுன் ஸ்தம்பித்த நிலையில் நான்



எழுந்து வர, என்னைப் பின்தொடர முடியா மல் வெறுமனே விளித்தார்.

ஆஸ்பத்திரியை விட்டு அர்ஜுனின் ஆபீ சுக்குத்தான் போனேன். அங்கே கீதாவைப் பார்த்தேன். அவள் என்னைக் கண்டு ஆச்ச ரியப்பட்டாலும் நான் சொல்வதைச் செய்ய ஆயத்தமாக இருந்தாள்.

"கீதா, எனக்கு அந்த ரஞ்சனி அட்ரஸ் வேண்டும்."

"தரேனே" என்றாள், சற்று பட்டும் படா மலும் என்னைப் பார்த்து.

"அப்புறம் கீதா, ஒரே ஒரு வேண்டுகோள்."

"சொல்லுங்க ரேகா."

மறுபடி மரியாதைப் பேச்சு! "கீதா, நான் அவ அட்ரஸ் கேட்டதை அர்ஜுனுக்குச் சொல்ல வேண்டாம், ப்ளீஸ்."

"சரி, ரேகா."

"எங்கிட்டேருந்து எத்தனையோ விஷ யங்களை நீங்க எல்லாரும் சேர்ந்து மறைச்சு வெச்சதுக்கு உங்க அத்தனை பேரையும் நான் முகங்கொடுத்துக் கூடப் பேசக் கூடாது. இன்னும் கொஞ்ச நாளைக்கு உங்க தாட் சண்யம் தேவையாயிருக்கு, கீதா."

"ரேகா, நான் இப்ப ஏதும் சமாதானமா சொல்ல முடியாது. எது சொன்னாலும் உனக்கு ஏற்காது. ஒண்ணை மட்டும் ஞாபகம் வெச்சுக்கோ. நான் அர்ஜுனுடைய எம்ப் ளாயி. அவர் சொன்ன மாதிரி நடக்க வேண் டிய கட்டாயம் இருந்தது. ஏன், எதுக்குன்னு கேட்க முடியலை. அதுக்கு உரிமை இல்லை. பம்பாய்க்கு இந்த ஆசாமிக்கு ஃப்ளைட் டிக்கெட் புக் பண்ணுன்னா பண்ணி ஆக ணும். அதுக்குத்தான் எனக்குச் சம்பளம். யாருக்கு ஃப்ளைட் டிக்கெட், அவளுக்கும் உங்களுக்கும் உறவு என்னன்னு கேட்க முடி யாது. சொல்றது உனக்குப் புரியுதுன்னு நெனைக்கிறேன்."

"புரியுது. விசுவாசமுள்ள செக்ரடரி வேறு 'வேலை'யும் செய்யலாம்னு சொல்றே, அவ்வளவுதானே! உனக்கு வெக்கமா இல் லையா கீதா? கட்டின பொண்டாட்டியை வச்சுக்கிட்டு மற்ற பொண்கூட ஒருத்தன் ஊர் சுத்தறான்னா அதுக்காக உடனே ரிசைன் பண்ணிட்டுப் போகக் கூடாதா? மனச்சாட் சின்னு ஒண்ணு கிடையாதா? நீ கடமையை அப்படிச்செய்யறதாலே மற்றொரு மனம் புண்படும்னு யோசிக்கவே இல்லையா? இல்லை, எல்லாத்தையும் சுலபமா மறைச்சுர லாம்னு ப்ளான் போட்டீங்களா? எனக்கு என்ன தெரியும், கடமை உணர்ச்சியால எத்தனை முறை நீ கூட அர்ஜுன்கிட்ட.....

"தட் வாஸ் ஹார்ஷ் ரேகா."

"அட்ரஸ் சொல்லு. வெறுப்பில் இருக்கேன்" என்றேன்.

"என்ன இருந்தாலும் அர்ஜுனை மட்டும் விட்டுப் போய்டாதே ரேகா. அவர் அப்படியே அழிஞ்சு போய்டுவார்."

"அப்படி எனக்குத் தோணலை. அட்ரஸ் சொல்லு."

அட்ரஸ் ஆழ்வார்பேட்டையில் அமைதியான தெருவில் இருந்தது. பக்கத்தில் மந்திரி வீடு இருப்பதால் செக்யூரிடி பலமாக இருந்தது. ஆட்டோவின் நம்பர் குறித்துக் கொண்டார்கள். நாய் போர்டின் அருகே கேட்டுக்குப் பின் கோல்டன் ரிட்ரீவர் நாய் வந்து குரைத்தது.

"யாரு வேணும் உங்களுக்கு?"

"ரஞ்சனி அம்மாவைப் பார்க்கணும்."

"படுத்திருக்காங்களே."

"பார்க்கணும். ரேகா வந்திருக்கிறதாச் சொல்லுங்க, எழுந்துருவாங்க."

இதற்குள் பால்கனியிலிருந்து "யாரு முன் சாமி?" என்று குரல் கேட்க, ரஞ்சனிதான், நைட் கவுனில் நின்று கொண்டிருந்தாள்.

"வாங்க, வாங்க... முன்சாமி கதவைத் திற" என்றாள்.

ஹாலுக்குப் போன போது, உடன் வேலைக் காரன் வந்து எனக்குக் குளிர் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க, குடித்ததும் அமைதி யானேன். நவீனமாக அலங்கரிக்கப்பட்ட ஹால். அந்த வீட்டின் சொந்தக்காரர் ஜூரிச், ம்யூனிச் எல்லாம் போயிருக்கிறார் என்பது தெரிந்தது.

ரஞ்சனி, கழுத்தில் தன் வெட்டுத் தழும் பைக் காட்டினாள். விலா பக்கத்தில் ஒன்று இருந்தது. கழுத்தில் ஒரு நீற்றல் இருந்தது.

"ஆறிப் போச்சு. ப்ளாஸ்டிக் ஸர்ஜரி பண் ணிக்கணும்" என்றாள்.

"எல்லாம் கெட்ட சொப்பனம் மாதிரி நடந்துதா என்று நம்ப முடியாமல் இருக்க, இந்தக் காயங்கள்தான் அத்தாட்சி. நீ எப்படி இருக்கே?"

"எனக்கு இன்னும் ஆறலை" என்றேன். அழுதேன்.

அவளும் அழுதாள். "நாம்ரெண்டு பேரும் ஒண்ணு" என்றாள்.

"விக்டிம்ஸ்."

எங்கள் தனித்தனி தகுதிகளும் அழகுகளும் அழகின்மையும் விலகிப் போய் இருவரும் பெண்கள் என்கிற தோலுரித்த உண்மை மட்டும் பாக்கியிருக்க, ஒரே காரணத்துக்காக அழுதோம்.

"ஓர் ஆணாதிக்க சமூகத்தின் இரைகள் நாம்" என்றாள் ஆங்கிலத்தில். "ரேகா, நான் அர்ஜுனை இனி பார்க்கப் போறதில்லை. ஹி இஸ் யுவர்ஸ். நான் அவரை ஒரு காலத் தில வெறி போல நேசிச்சேன். இப்ப இல்லை. லெட்டர்ஸ் காமிக்கட்டுமா? அர்ஜுன் எழுதி யது ."

"வேண்டாம்."

"ஹி இஸ் எ நைஸ் கை. அவனை நான் இனிமே பார்க்கவே மாட்டேன். என் கோபம் எல்லாம் அந்த ஒரே கத்திக் குத்தில தீர்ந்து போச்சு. பைத்தியம் மாதிரி நடந்துக்கிட்டேன். நல்லவேளை போலீஸ் கேசு ஆகலை. இல்லைன்னா எத்தனை வருஷம் ஜெயிலுக்குப் போகணும்? தற்கொலை முயற்சி, மேன்ஸ்லாட்டர். என்ன ஆச்சு எனக்கு? எனக்குள்ளே யுக யுகமா அழுத்தி வெச்ச ஒரு பத்ரகாளி, வெளியில வந்தாப்பல. நான் அந்தச் சமயத்தில நானாவே இல்லை. கேளிக்கைப் பொருளாப் பயன்படுத்தப்பட்ட அத்தனை பெண்களும் போல இருந்தேன்" என்றான். "இப்ப கோபம் அடங்கிடுச்சு. ரேகா, லெட்ஸ் பி ஃப்ரெண்ட்ஸ். நீ என்ன செய்யறதா உத்தேசம்?"

"என்ன செய்யணும்?"

"கோ பேக். அர்ஜுன் கிட்ட திரும்பிப் போ. அதான் உனக்கு உத்தமம். உன்னைப் பார்த்தா வீட்டுப் பெண்டாட்டிங்கிற பாத்திரத்துக்கு என்றே அமைந்த பெண்ணாத்தான் தோணுது. உனக்குத் தனியான் ஒரு பெண்ணா இந்தச் சமூகத்தில உயிர் வாழத் திராணியும் மனோதைரியமும் இருந்தா நீ அர்ஜுன் செய்த காரியத்துக்கு அவனை உதறித் தள்ளலாம். தைரியம் இருக்கா?"

"இருக்கா இல்லையான்னு எனக்குத் தெரியாது. மற்ற பேரைச் சார்ந்தே வாழ்ந்துட்டேன். அம்மா, அப்பா, போன ஒரு வருஷமா அர்ஜுன். அவர் ஆட்டாடுன்னா ஆடினேன். போட்டோக்கு சிரின்னா சிரிச்சேன்."

"அர்ஜுனைப் பிரியறதில உனக்கு வாழ்க்கையில புது அர்த்தம் கெடைக்கும்னு தோணுதா?"

"நான் அதெல்லாம் பத்தி நினைக்கவே இல்லை. என்ன செய்யணும்கற குழப்பத்திலே இருக்கேன்."

"உன் உள் மனது என்ன சொல்றது?"

"எல்லாத்தையும் விட்டுட்டு எங்கேயாவது ஓடிப் போன்னு சொல்றது."

"தனியா என்ன செய்வே?"

"தெரியாது. ஆனா மிக வலுவான ஓர் அடிபட்ட உணர்ச்சி, ஒரு பாவமும் செய்யாம, துரோகம் செய்யப்பட்ட ஓர் உணர்ச்சி, ஏமாற்றப்பட்ட உணர்ச்சி, 'போய்டு, போய்டு'ன்னு சொல்றது" என்றேன்.

அவன் "தட்ஸ் யுவர் ப்ராப்ளம்" என்றான். "உனக்கு உபதேசம் சொல்லக் கூடிய தகுதி இல்லை எனக்கு" என்றான் சட்டென்று.

"என்னால இனிமே உனக்கு எந்தப் பிரச்னையும் வராது. கையில அடிச்சு சத்தியம் பண்ணிக் கொடுக்கறேன்" என்று கையைப் பிடித்தான்.

நான், "வேண்டாம்" என்றேன்...

(அடுத்த இதழில் முடியும்)



# சிரிப்பென்ஸ் மாமி!

ஆர்ப்பாட்டமான லொகேஷன் இல்லை. அடிதடி இல்லை. ஆபாச காட்சிகள் இல்லை....இப்படியும் ஓர் ஆங்கிலப் படம்: MRS. DOUBT FIRE. படு பாங்கான குடும்பக் கதை:

பதினாறு வருட தாம்பத்தியத்துக்குப் பின் மிராண்டா - டேனியல் திருமணம் முறிகிறது. குழந்தைகள் மூவரும் தாயின் கவனிப்பில் வாழ்வதுதான் நல்லது என்று நீதிபதி ஒரு தாற்காலிகத் தீர்ப்பளித்து விட்டதை டேனியலால் தாங்க முடியவில்லை.

தனது மேக்கப் நண்பர்களான இருவர் உதவியுடன் அறுபது வயது மிஸஸ்.டௌட் ஃபயராக மாறி தன் சொந்த வீட்டிலேயே புகுந்து குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும் ஆயா வேலை பார்க்கிறான் டேனியல். சீக்கிரமே குழந்தைகள் அவனை அடையாளம் கண்டு கொண்டு குஷியாகி, மம்மியிடமிருந்து அவனை மறைக்க ஒத்துழைப்புக் கொடுத்தாலும்... எந்த நிமிஷத்திலும் எப்படி உண்மை வெளிப்பட்டு என்ன முடிவு நேரப் போகிறது என்பதுதான் முழுக்க முழுக்கச் சிரிப்பைக் கூட்டுச் சேர்த்துக் கொண்ட சஸ்பென்ஸ். (தலைப்பு புரிகிறதா)

டேனியலுக்குத் (ராபின் வில்லியம்) தொழிலே டீவி நிலையத்தில் குரல் வித்தை காட்டுவது என்று முன்னறிவிப்பாய்க் காட்டிவிடுவதால் நம்பகத் தன்மை கூடுகிறது. அதி அற்புத மேக்-அப் இன்னுமொரு பிளஸ் பாயின்ட் (ஒப்பனைக்கான அகாடமி விருது பெற்றது இப்படம்)

ராப் மியூசிக் ஓடவிட்டு, அதற்கேற்ப அவர் பெருக்குவதும், சமைப்பதும் பசங்களுடன் ஓடிப் பிடித்து விளையாடும் பாவம் பிடிப்பதும் அமர்க்களம்!

ஒரு கட்டத்தில் டீவி முதலாளியையும் மிராண்டாவையும் டேனியல் ஒருசேர சமாளித்தாக வேண்டும். டீவி காரரிடம் சுயரூபத்திலும் மிராண்டாவிடம் மிஸஸ் டௌட் ஃபயராக உரு மாறியும் அவர் டாய்லெட்டில் உடைமாற்றி அல்லாடிச் சமாளிப்பது இருக்கிறதே, சிரிப்பிலே வயிற்று வலிதான்.

மிராண்டாவாக வரும் ஸாலி ஃபீல்டு மகா குடும்பப் பாங்கு. ஆனால் உணர்ச்சிகள் ஒவ்வொன்றும் சும்மா பட்டை தீட்டின மாதிரி பன்ளம் பறிக்கின்றன. நீதிபதி முன்னிலையில் டேனியலைக் கொண்டு நிறுத்த, தான் தன் குழந்தைகளுடன் இருக்க வேண்டும் என்ற ஏக்கத்தில் செய்தவை என்று தன் தவறுகள் ஒவ்வொன்றையும் சொல்லிக் கொண்டு வரும்போது மிராண்டாவின் ஆத்திர முகத்தை அனுதாபம் தழுவுவது ரசவாதம்.

பொடிசுகள் ஒவ்வொன்றும் ஒரு குட்டிக் கவிதை.

சிரிப்பிலே சென்டிமெண்ட் என்பது ஒரு வினோதமான கலவை. வயது வித்தியாசம் இல்லாமல் குடும்பத்தில் அத்தனை பேருமாய் உட்கார்ந்து இந்தப் படத்தைப் பார்க்கலாம். அவரவர் ருசிக்குத் தகுந்த மாதிரியாய் ஆங்காங்கே ரசிக்க இடம் இருக்கிறது.

**- பி.எஸ்.எஸ்.**

# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

**THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED**

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras 600 004. ☎ 4942503 / 4943365

| | | |
|---|---|---|
| **BRANCHES: THIRUVANMIYUR** | : | 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras 41. ☎ 410050 |
| **TONDIARPET** | : | 667, T.H. Road, Madras 81. |
| **SAIDAPET** | : | 11, Jones Road, Madras 15. ☎ 4851468 |

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs.1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit Rs.10,000/- Period - 12 months

Interest payable monthly **19.5%** p.a. Interest payable annually **21%**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* **Company is in 21st year of service.**
* Transaction with members only (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly Interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

* A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gms. (Rs.2400/- per 8 gms.)
  * No Ceiling
  * No Charges
  * No Interest Tax
  * Recurring Deposit not required
  * **Your Jewels are insured at our cost.**

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

| P.S. SAMBASIVAM | G. KUMARAVELU | K.R.V. RAMANI |
|---|---|---|
| Secretary | Vice-President | President |

# ஒரு விரல் சமுத்திரங்களை

**ரிஷபன்**

இந்த வாரம் ரிசப்ஷனில் டியூட்டி. வருகிற ஃபோன் அழைப்புகளுக்குப் பதில் சொல்லி... தேவையான விவரம் தந்து... குறிப்பிட்ட நபர்களை அழைப்பதில்... சுகுணா பரபரப்புடன் இருந்தாள்.

எப்படியும் பொழுதுபோகும். இடையே சந்தியாவுக்கும் ஃபோன் பண்ணலாம். அவளிடம் பேசுவதில் ஒரு வசதி இருக்கிறது. சுகுணாவைப் பற்றிய 'எல்லா' விவரங்களும் தெரிந்தவள்.

லைன் கிடைத்து விட்டது.

"ஹாய்..."

"ம்... நீ எப்படி... பிஸியா?"

"ஆஸ் யூஸுவல்... பிரகாஷ் வந்திருக்கா?"

"வந்திருக்கான். இப்ப இல்லே, ஸ்டோர் ரூம் போயிருப்பான்."

"நேத்தே கேட்கணும்னு நினைச்சேன். உன்னோட மேரேஜ் புரபோஸல் என்னாச்சு? உன் ஜாதகத்தை யாரோ வாங்கிட்டுப் போனாங்களே..."

கேட்கக் கூடாது என்று நினைத்த கேள்வி. கேட்கப்பட்டு விட்டது.

"ம்....."

"புரியல்லே."

"எனக்கேத்த ராஜகுமாரன் இன்னும் வரலே" என்றாள் லேசாய், வலுக்கட்டாயமாய்ச் சிரித்து.

அந்த நிமிஷம்தான் அவன் உள்ளே வந்தான். எவரிடம் விசாரிப்பது என்று யோசிக்காமல் தீர்க்கமாய் இவளையே பார்த்துக் கொண்டு அருகில் நெருங்கினான்.

"ஒரு நிமிஷம்... சந்தியா... யெஸ்.. ப்ளீஸ்..."

"மிஸ். சுகுணா..."

தன்னைத்தான் தேடி வந்திருக்கிறான்.

"என்ன வேணும்? நான்தான்."

"ஸாரி. நீங்க வேற ஏதோ பேசும் போது டிஸ்டர்ப் பண்ணிட்டேனா."

"நத்திங். ஹாய் சந்தியா நான் அப்புறம் காண்டாக்ட் பண்றேன்..." என்றபடி ரிஸீவரைக் கீழே வைத்தாள்.

"சொல்லுங்க..."

"கோமளா என்னோட ரிலேட்டிவ். அவங்கதான் உங்களைப் பார்க்கச் சொல்லி என்னை அனுப்பினாங்க."

முகம் மாறாமல் அவன் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள், மனசுக்குள் 'வந்த போர் வந்த விஷயத்தைச் சீக்கிரம் சொல்லேன்...' என்ற நினைப்புடன்.

"ஒரு ஆப்ளிகேஷன்... எங்க வீட்டுல ஒரு ஃபங்ஷன். என்னோட ஃபாதர் நாட் வெல். இடது கை, இடது கால்.. பராலிசிஸ். பட்.. இந்த ஃபங்ஷன் அட்டெண்ட் பண்ணணும். ஒரு வீல் சேர்... ஜஸ்ட் ஃபார் டு டேய்ஸ் கிடைச்சா..."

சுகுணாவின் முகம் லேசாக மாறியது.

"நீங்க நினைச்சா ஹெல்ப் பண்ணலாம்..." என்றான் அவசரமாய்.

வெளிநபர்களுக்குத் தருவதில்லை. முழுக்க முழுக்க ஆஸ்பிடல் உபயோகத்திற்குத்தான் என்று சொல்ல நினைத்தவள் எப்படிச் சொல்லலாம் என்று யோசித்தாள்.

அவனே மீண்டும் கெஞ்சுகிற தோரணையில் பேசினான்.

"கோமளாதான் சொல்லச் சொன்னாங்க. எப்படியும் இந்த ஹெல்ப் வேணும்னு."

"லெட் மி டிரை..." என்றாள் அரை மனதாக.

அவன் பிரகாசமானான்.

"நிச்சயம் கிடைக்கும். உங்க சக்தி உங்களுக்கே தெரியாது..." என்றான் புகழ்ச்சியாக.

சீஃப் உள்ளேதான் இருக்கிறார். இவளிடம்

பிரியம் உண்டு. இந்த இடம் தாண்டிப் போகும் போது கண்ணில் சிரிப்பு தெரியும். இவள் அப்பா உடம்பு சரியில் லாமல் போன போது, மிகக் குறைந்த கட்ட ணத்தில் வைத்தியம் பார்த்தவர்.

உள்ளே போன போது, "யெஸ் என்ன வேணும்? அவ்வளவுதானே, ஸ்டோர்ல சொல்லிட்டு எடுத்துக்க. நீயே பத்திரமா. ரிடர்ன் பண்ணிடு, ஓக்கே..!" என்றார் சீஃப்.

நிமிஷமாய் வேலை முடிந்து விட்டது.

வெளியே வரும் போது உள்ளூர உற்சாக மாய் இருந்தாள்.

புன்னகை பூத்து விட்டுப் போனாள். சந்தியா வுக்கு மீண்டும் டயல் செய்தாள்.

"சந்தியா..."

"என்ன... உங்க ஆள் போயாச்சா..."

"ச்சீ. அது ஒரு ஆப்ளிகேஷன்..."

"சீரியஸா சொல்லு. என்ன பிரச்னை?. ஏன் டிராப் ஆச்சு? உன்னோட மேரேஜ் செட்டிலாயிரும்னுல நினைச்சோம்."

கருணா லேசாய்க் கசிந்தாள். பக்கத்தில் எவருமில்லை. கண்ணில் பளபளப்பு. நீர் ததும்பி, கீழே விழாமல் ஜாலம் காட்டியது. எதிர்ப்புற பூ ஜாடி கலங்கித் தெரிந்தது.




அவனும் யூகித்திருக்க வேண்டும்.

"தேங்க் யூ..." என்றான் இவள் பேசுமுன்.

"நான் என்ன சொல்லுவேன்னு."

"ஐ நோ. உங்களால முடியும்னு. தேங்க் யூ. தேங்க் யூ வெரி மச்."

"எப்ப வேணும்..."

"பதினாலு, பதினஞ்சு இரண்டு நாளும். நானே வரேன். ஆட்டோல வச்சுக் கொண்டு போயிட்டு, மறுபடி பத்திரமா ரிடர்ன் பண் ணிடறேன்."

மறுபடி ஒருமுறை பெரியதாய் நன்றிப்

'பொண்ணு போட்டோவும் அனுப்பி னோம், ஹாஸ்பிடல்ல வொர்க் பண்றான்னு சொல்லி. என்னமோ தெரியலே. வேற வரன் பாருன்னு பதில் போட்டுட்டான்... அவனை மீறி எதுவும் பண்ண முடியாது.'

போன மாதம் ஒரு நாள் வீட்டுக்கு வந்த போது சொன்னார். அவர் மூலம்தான் ஜாதக மும் ஃபோட்டோவும் அனுப்பியது. அவர் தான் இப்படி ஒரு வரன் இருப்பதாகத் தகவல் சொன்னது.

'நிச்சயம் இந்த வரனை நானே முடிச்சுத்



## எக்காலத்துக்கும் ஏற்ற நாவல்!

◆ இன்று எனக்கு வயது எழுபது. அந்தக் காலத்தில் விடியற்காலை ஐந்து மணிக்கே ரயிலடிக்குச் சென்று பார்சலைப் பிரித்து, அங்கேயே தியாக பூமியைப் படித்துவிட்டுத்தான் வீடு திரும்புவேன். தற்போதும் தியாகபூமி கதையை அதே ஆர்வத்துடன் மீண்டும் படித்தேன்.
சென்னை - 2, மு. சுப்ரமணியன்.

◆ சாவித்திரி கதாபாத்திரப் படைப்பு அருமை. பெண் இனத்தின் பிரதிநிதியாக விளங்குகிறாள். இளைய தலைமுறையினருக்கு இக்கதை ஓர் வரப்பிரசாதமாகும்.
கோபாலபுரம், ஜெயந்தி கணேஷ்.

◆ "அமரர் கல்கி"யின் படைப்புகளைப் பாராட்டுவது ஒரு பிரச்னைக்குரிய விஷயமாகும். ஒவ்வொரு படைப்பைப் படிக்கும் போதும், அதுதான் அவரது மிகச் சிறந்த படைப்பு எனத் தோன்றும். "தியாக பூமி"யும் அப்படித்தான்.
திருவண்ணாதபுரம், தி.க. பாலசுப்பிரமணியன்.

◆ 'தியாக பூமி' வெறும் பொழுது போக்குக் கதையல்ல. படிக்கும் ஒவ்வொருவருக்கும் அவர்களின் வாழ்க்கையை உணரவும் உயர்த்தவும் தூண்டும் பாடம்!
திருவெண்ணெய்நல்லூர், வைத்யா.

◆ எங்கள் தாத்தா, எங்கள் அப்பா படித்த அதே நாவல், என்னைப் போன்ற இளைய தலைமுறையினர் இப்போது படிக்கும் போதும் சுவை குன்றாமல் இருப்பதற்கு என்ன காரணம்? கல்கியின் இதயத்தைத் தொடும் தெளிவான எழுத்து லாகவமும், அவருடைய தெளிவான சமூகப் பார்வையும்தான் அதற்குக் காரணம். தியாக பூமியைப் படித்தேன் என்பதைவிட நானும் சுதந்திரம் அடைவதற்கு முந்தைய இந்தியாவில்-வாழ்ந்தேன் என்பதே உண்மை.
முடிகண்டநல்லூர், க. ராஜேந்திரன்.

◆ இளைய தலைமுறையினருக்கு, இப்படி ஒரு காவியம் இருந்தது என்பதை இத்தொடரை மீண்டும் வெளியிட்டு உணரச் செய்திட்ட கல்கி ஆசிரியர் குழுவினரை மனமாரப் பாராட்டுகின்றேன். உயிரோட்டமான ஓவியங்களை வரைந்த ஓவியர் ஸ்யாமும் பாராட்டப்பட வேண்டியவர்.
விசலூர், ஜி.ஜி. கிருஷ்ணன்.

◆ அமரர் கல்கியின் 'தியாக பூமி' எக்காலத்திற்கும் ஏற்ற நாவல்.
திருநெல்வேலி, பாநு.

தரேன். பையன் மட்டும் யெஸ்னு சொல்லிட்டாப் போதும். வேற எதைப் பத்தியும் நீங்க கவலைப்பட வேணாம்...' என்று நிறைய உற்சாகப்படுத்தி விட்டுப் போனார், ஜாதகம் வாங்கிப் போன போது.

ஏன் இந்த மனிதர்கள் சுலபமாய் நிராகரிக்கிறார்கள். 'பிடிக்கவில்லை' என்று சொல்ல எது ஆதாரம். அழகா, உடம்பா, பணமா? எதை வைத்து நிர்ணயிக்கிறார்கள்? ஒருத்தனுக்காய் வளர்பவளை இன்னொருத்தன் கட்ட முடியாது என்று மழுப்பல்கள். அப்படியெனில் எனக்கான கணவன் எங்கே?

"ஹாய்... என்ன ஸைலண்ட் ஆயிட்டே?" - சந்தியா இரைந்தாள் மறுமுனையில்.

"ப்ச்..."

"போவுது விடு. இந்த அப்பன் இல்லேன்னா... இன்னொரு குப்பன்னு எங்க பாட்டி சொல்லுவாங்க."

"இவர் குப்பன் இல்லே. சுரேஷ்!" என்றாள் கருணா சிரிப்புடன்.

"ஹோ... பேரெல்லாம் ஞாபகம் வச்சிருக்கே..."

"வேற வழியில்லாம... எப்படியெல்லாம் ஹோப் கொடுத்து.... பையன் வீட்டுலேர்ந்து பேட்ச் பேச்சா மூணு தடவை என்னைப் பார்க்க வந்து..."

"சுரேஷும் வந்தானா?"

"ம்ஹூம். அவர் பாம்பேல வேலையாம். இவங்க பார்த்து ஓகே சொன்னாதான் அவர் வருவாராம்."

"சர்தான் யார், விட்டுத் தள்ளு..." அப்புறம் சிறிது நேரம் பேசி விட்டு வைத்தாள்.

'எனக்கே மனசுக்குக் கஷ்டமா இருந்தது. ஒரு ரீஸனும் சொல்லாம ஏன் வேணாம்னு சொல்றாங்கன்னு.... - பொண்ணு போட்டோ பார்த்தா நல்ல மாதிரி தெரியல்லேன்னு கமெண்ட் அடிச்சானாம். ராஸ்கல். போறான் விடு. மனுஷா குணம் போட்டோலயா தெரியும்.'

ஏதோ ஒரு அஜாக்கிரதையில் உளறி விட்டுப் போனார் இரு குடும்பங்களுக்கும் இடையே தூது போனவர்.

அழத் தோன்றியது. அழவில்லை.

# GOLDEN OPPORTUNITY

## Bharathi Gems & Jewels

*Proudly announces*

**FREE**
Before 12th July '94 One 20 gm Silver Coin

### FIXED DEPOSIT

| *Period* | *Rate of Interest* | *Amount* | *Interest Payable* |
|---|---|---|---|
| 3 months & above | **24%** per annum | Rs. 5000/- & above | Bi-monthly |

### BHARATHI GOLDEN SAVINGS SCHEME

Pay Rs.200/- for 24 months. The 25th instalment will be paid by us. And you can get jewels worth about Rs. 5000/- after 25 months. Moreover, you are eligible for a **Jewel Draw** everymonth for which the winner gets Rs. 10,000/- worth Gold Jewellery. Plus **A BUMPER JEWELLERY DRAW** after 25 months, for which jewels worth **Rs. 1,00,000/-** for the winner. **"Join in the scheme Today & Harvest the Gold."**

### WAIT AND SAVE SCHEME

| *Period* | *Amount of Deposit* | *Value of Gold Jewels permitted to be taken on the 13th, 25th & 37th Months.* |
|---|---|---|
| 1 year | 5000 | 6500 |
| 2 years | 5000 | 8000 |
| 3 years | 5000 | 10,000 |

Depositors will be given only jewels for their Wait and Save Scheme. Under no circumstance cash will be paid.




**Bharathi Gems & Jewels**
F-7, Spencer Plaza, 769, Anna Road,
Madras-600 002. Ph : 8524280 Fax : 91-44-8521782

Komala Ads

## சவாலே சமாளி! போட்டி முடிவு :



"ஆபீஸுக்குப் போகும் அவசரம்; தவறுதலாக ரயிலில் லேடீஸ் கம்பார்ட்மெண்ட்டில் ஏறி விடுகிறீர்கள் - எப்படிச் சமாளிப்பீர்கள்?

- இந்தக் கேள்விக்கு விடையாக வாசகர்கள் கற்பனையைப் பஞ்சகல்யாணி குதிரை வேகத்தில் ஓடவிட்டிருக்கிறார்கள்!

**சிறந்த கற்பனைக்கு ரூ. 250/- பரிசு பெறுபவர் : எஸ். உமா, 7, நாலாவது தெரு, டான்ஸி நகர், வேளச்சேரி, சென்னை - 42.**

உடனே கண் தெரியாதவன் போல விழித்து(?) தட்டுத் தடவி, தடுமாறி உள்ளே செல்ல முயல்வேன். மாதர்குலம் கோபம் மாறி, கருணை மேலிட எனக்கு ஒரு இருக்கை ஒதுக்கித் தருவதுடன் அடுத்த கம்பார்ட்மெண்டில் ஏறவும் உதவுவர்!

- எஸ். உமா, சென்னை - 42.

**ஐந்து ஆறுதல் பரிசுகள்**

**தலா ரூ. 25/-**

"ஸ்பெஷல் செக்கிங் ஆபீஸர் நான். டிக்கெட்! டிக்கெட்! டிக்கெட்டை எடுங்கம்மா! சீசன் பாஸ் வச்சிருக்கறவங்க பாஸைக் காட்டுங்க! என்பேன்."

- நா. விஜிலா தேரிராஜன், திருச்சுழி.

"என்ன பார்க்கறீங்க? விஷயமே தெரியாதா? இன்னிலேருந்து லேடீஸ் கம்பார்ட்மெண்ட்ல ஆண்களுக்கு நாலு இடம் ஒதுக்கிடு பண்ணியிருக்காங்க! முந்தா நேத்து முதல்வர் ஒரு பந்த் நடத்தினாங்களே! அது இதுக்குத்தான்!" நிதம் ஒரு பந்த் நடப்பதால் நிஜமென்றே நம்பிவிட என் இக்கட்டை விளக்கிச் சமாளிப்பேன்!"

- இ.க. பால சுப்பிரமணியன், திருவண்ணாதபுரம்.

"ஸாரி! நான் பாரதிராஜாவோட அசிஸ்டெண்ட். எங்க அடுத்த படத்துக்குப் புதுமுகம் தேடறோம். அதனால பஸ் ஸ்டாண்ட், பீச், இரயில்வே ஸ்டேஷன் என எல்லா இடங்களுக்கும் சென்று வருகிறோம். இந்த கம்பார்ட்மெண்டில் அழகிய முகங்கள் தென்பட்டது. அதுதான் இதில் ஏறிவிட்டேன்."

- வ. கலைவாணி தங்கவேலு, கரூர்.

"ஒருத்தியிடம் 'உனக்குப் படிப்பு நின்னு மூணே மாசத்திலே கல்யாணம்.' இன்னொருத்தியிடம் 'இரண்டு வருடத்திலே நீ வெளிநாடு போறது நிச்சயம். கைரேகையைப் பார்த்தால் இன்னும் சரியாச் சொல்லலாம்' என்பேன். அவ்வளவுதான்... 'உட்காருங்க ஸார்'னு எல்லாரும் கையை நீட்டுவாங்க!"

- நர. சீனிவாசன், தஞ்சாவூர் - 7.

"இந்த கம்பார்ட்மெண்ட்ல உள்ள ஃபேன், லைட்டெல்லாம் சரியா வேலை செய்யுதான்னு 'செக்' பண்றது என்னுடைய வேலை" என்று புன்சிரிப்போடு சொல்லிவிட்டு பேனா, பென்சில் ஏதாவதொன்றை எடுத்துக் கொண்டு 'ஆன்', 'ஆஃப்' செய்து கொண்டே நகர்ந்து 'விடுவேன்!"

- ஜி. கதிரேசன், சிறுமுகை.

இயல்பிலேயே வீம்பு. அழுதால் இன்னும் தன்னைக் கேவலப்படுத்தும் என்ற பாதுகாப்பு உணர்வு. மானசீகமாய் அலட்சியப்படுத்தினாள். ச்சீ... போ. என்று.

"ஸாரி... எகெய்ன்..."

அவன்தான் எதிரில் நின்றிருந்தான்.

"எ... என்ன..."

"இந்த இன்விடேஷனை கொடுக்காம போயிட்டேன்."

கையில் 'பளபள..' என்றிருந்த இன்விடேஷனில் பெயர் எழுதி நீட்டினான்.

"எங்கண்ணா மேரேஜ். அதுக்குத்தான் அந்த வீல் சேர். நீங்க அவசியம் வரணும். உங்களை மாதிரி ஒரு நல்ல பர்ஸன் வந்து அவங்களை விஷ் பண்ணணும்."

அனிச்சையாய்க் கைநீட்டி வாங்கினாள்.

"வரேன்..."

திரும்பிப் போனான்.

தற்செயலாய்ப் பார்வை கவரின் மேல் பதிந்தது. பிரித்துப் படித்தாள்.

'சுரேஷ் வெட்ஸ் வித்யா.'

ஆமாம், அதே பம்பாய் சுரேஷ்தான்!

# கபில்தேவும் அசாருதீனும் எப்போது எழுதுவார்கள்?

♦ 'காங்கிரஸ் இன்றைய சூழ்நிலையில் தேவையில்லாத குழப்பமான' பல நடவடிக்கைகளை எடுத்து வருவதைத் தெளிவாகக் கார்ட்டூனில் காட்டியிருந்ததும் சேஷனுக்கு மக்கள் ஆதரவு இருந்தும் 'தன் நிலையைத் தக்க வைத்துக் கொள்ள' அவர் எடுத்த 'நாலாந்தர' முடிவுகளைச் சுட்டிக் காட்டித் 'தலையங்கம் வடித்திருந்ததும் எங்கள் எண்ணங்களின் பிரதிபலிப்பே!

குடந்தை, பாபு.

♦ 'சேஷன் தலை தப்பியதா' நடுநிலையோடு எழுதப் பட்ட தலையங்கம். சேஷனின் நிறை குறைகளைச் சரியாகக் கணித்துள்ளீர்கள்.

திருக்கண்ணபுரம், கே.கோவிந்தராஜன்.

♦ 'கல்லூரிப் படிப்பு சுரண்டி பிடிக்கத்தானா?' இக்கால கட்டத்துக்கேற்ற' கவர் ஸ்டோரி. அனைவரையும் சிந்திக்க வைத்துள்ளீர்கள்.

திருவெண்ணெய்நல்லூர், வைத்யா.

♦ கரண்டி பிடிப்பதை ஏன் சர்வ சாதாரணமாகச் சொல்கிறீர்கள்? கரண்டி பிடிப்பதற்குக் கூட இந்தக் காலத்தில் படிப்புகள் (கேட்டரிங் டெக்னாலஜி) உள்ளன என்பதை எப்படி மறந்தீர்கள்? இப்பொழுதெல்லாம் எங்கு பார்த்தாலும் வன்முறை, சண்டை, சச்சரவு, சமுதாயச் சீர்கேடுகள் என்று உலகம் இயந்திரத்தனமாகி விட்ட சூழ்நிலையில், குடும்பத்தையும் சமுதாயத்தையும் நல்ல முறையில் அரவணைத்துச் செல்ல பெண்களின் தாய்மையான சேவை தேவைப் படுகிறது. அதற்காகத் தற்பொழுது வேலை பார்க்கும் பெண்கள் வேலையை விட வேண்டாம். இனி வரும் படித்த பெண்கள் வேலைக்காக ஏங்க வேண்டாம். குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்ப்பதும் இந்த தேசத்திற்குச் செய்யும் மிகப் பெரிய சேவை என்பதை உணர வேண்டுகிறேன்.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

♦ பூக்களை வீசி மனித மனதைக் காயப்படுத்தும் புதிர் வித்தையை Attempt சிறுகதையின் ஆசிரியர் எங்கு கற்றார்? ஒரு பருவப் பெண்ணின் திருமண ஏக்கத்தை, ஏழைமை எப்படி தன் கோரக் கரங்களால் குதறுகிறது என்பதை நகைச்சுவை இழைசேர்த்து நேர்த்தியாக இழைத்திருக்கிறார். ஆனால் அதன் கனம்தான் தாங்க இயலவில்லை.

சின்னப்பநூர், டி.மஞ்சுளா.

♦ I strongly object to your attempt to title the Tamil short story as 'Attempt' in English. Please do not attempt such attempts in future.

சென்னை-59, ராமாபுரம் சந்துரு

♦ "ஸ்டெபி கிராப், மோனிகா செலஸ், சபாடினி" ஆகியோரின் கட்டுரைகள் அருமை! அடுத்த வாரம் "கபில்தேவ், அசாருதீன், டெண்டுல்கர்," ஆகியோரும் கட்டுரைகள் எழுதுவார்கள்(?) என்று எதிர்பார்க்கிறோம்.

சிதம்பரம், டி.ஆர்.வி.ஸ்டாலின்.

♦ தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று ஸ்டேட்மெண்டுகளும் கற்பனை என்பதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இன்றைய அரசியல் தலைவர்கள் பேசும் உண்மைகளே அவை! வாசகர்கள் மூவருக்கும் பாராட்டுக்கள்!

வி.பரமசிவம், மதுரை.

♦ ராமேஸ்வரம் சிறப்பிதழை ஒரு தனிப் புத்தகமாகவே அச்சிட்டு வெளியிடலாம் ; அவ்வளவு சிறப்பாக இருந்தது.

தக்கோலம், அமுல்குமா.

♦ மக்கள் சேவையே மகேசனை மகிழ்விக்கும் சேவை என்பதைப் பிரசங்கம் செய்வதைத் தவிர்த்து ராமகிருஷ்ணாபுரம் பகுதி வாழ் மீனவர்களின் நல வாழ்விற்கெனத் தன்னையே அர்ப்பணித்த சுவாமி பிரணவானந்தாவின் அறநெறிவாழ்வே நாம் அனைவரும் பின்பற்ற வேண்டிய உயரிய வாழ்வு!

திருச்சி-5, தமிழ்தாசன்.

♦ இராமேசுவரத்தைப் பற்றிய பல நுட்பமான விஷயங்களை அளித்திருந்தீர்கள். இந்த முயற்சி பாராட்டுதற்குரியது. ஆனால் இராமேசுவரத்துக்கு இரவு பகல் எந்நேரமானாலும் போய் வர வசதி அளிக்கும் பாம்பன் பாலத்தைப் பற்றி மறந்து விட்டீர்களே? ஆசியாவிலேயே மிக நீளமான இந்தக் கடற் பாலம் (இரண்டரை கிலோ மீட்டர்) இருபது கோடி ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்டது. பதினேழு ஆண்டு காலத்தில் கட்டி முடிக்கப்பட்ட இந்தப் பாலத்துக்கு அடிக்கல் நாட்டியவர் இந்திரா காந்தி. "இந்திராகாந்தி பாலம்" என்று பெயரிடப் பட்ட இதை 1988 அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி, காந்தி பிறந்த நாளில் அன்றைய பிரதமர் ராஜீவ் காந்தி திறந்து வைத்தார்.

சென்னை-90, ஆர்.சுப்பிரமணியம்,
தலைமைப் பொறியாளர்(ஓய்வு)
நெடுஞ்சாலைத் துறை, தமிழக அரசு.










"அசாத்தியம்" என்று சொன்னார்கள்.

"இவ்வளவு விரைவான வளர்ச்சி சாத்தியமில்லை" என்றார்கள்!

நல்ல வேளை, அவர்களை நாங்கள் பொருட்படுத்தவில்லை!

விவேகமுள்ள எங்கள் டெபாசிட்தாரர்கள் மிக உயர்தரமான சேவையைப் பெறுகிறார்கள். (போட்டியிடும் மற்ற சாதாரண சேவைகளை விட தனிச்சிறப்பு பெற்றது). இந்த சேவைகள் வாழும் வாடிக்கையாளர்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டு வடிவமைக்கப் பட்டவை. 20 நிமிடங்களில் கடன் பெறும் வசதி. திரும்ப பெறும் டெபாசிட் தொகை இந்தியா முழுதும் சமமாக ஏற்கப்படும் வசதி. 24 மணி நேரமும் தகவல் பதிவு செய்யும் வசதி. நள்ளிரவிலும் பணம் பெற்றுக் கொள்ள வசதியாக ATM கார்டு மற்றும் வாரத்தில் 7 நாட்களும் சேவை ஆகியவை. எங்கள் தொடர்பு எளிதில் கிடைப்பதையும், சுலபமாக பணம் பெற முடிவதையும் உறுதிப்படுத்தும் சிறப்பு அம்சங்கள் ஆகும்.

அனுமதிக்கப்பட்ட அதிக பட்ச வட்டியுடன், பிரபலமான வர்த்தக மையங்கள் தரும் தள்ளுபடி சலுகைகள். இலவச வரி ஆலோசனை மற்றும் பல மதிப்புமிக்க சேவைகளும் எங்கள் டெபாசிட்தாரர்களுக்கு உண்டு. எங்களுடைய நற்பெயருக்கும், நன்மதிப்புக்கும் காரணங்கள் பல:

• 75,000 - க்கும் அதிகமான முதலீட்டாளர்கள் அடங்கிய எங்கள் குடும்பம். • எங்கள் டெபாசிட் திட்டத்திற்குக் கிரைஸில் அளித்துள்ள FAA மதிப்பீடு • எங்கள் கமர்ஷியல் பேப்பர் திட்டத்திற்குக் கிரைஸில் அளித்துள்ள அதிகபட்ச மதிப்பீடான P1+ • UTI, IDBI, IFCI மற்றும் SIDBI போன்ற நிறுவனங்கள் செய்துள்ள முதலீடு. • SEBI அமைப்பினால் முதற்பிரிவு மர்ச்சண்ட் பாங்கர் ஆகப் பணி புரிய அனுமதி. • SEBI அமைப்பினால் எங்களுடைய மியூச்சுவல் ஃபண்ட்களுக்கு அங்கீகாரம்.

வேகமான, வீரியமான வளர்ச்சியை சாதித்துக் காட்ட வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம்.

இன்னுமா அதை அசாத்தியம் என்று சொல்கிறீர்கள்?

# SRF

# SRF ஃபைனான்ஸ் லிமிடெட்

6, அவென்யு ரோடு, நுங்கம்பாக்கம்,
**சென்னை** 600 034, தொலைபேசி: 8275272,
8251319 ஃபேக்ஸ் எண்: 8259103.

797/F, ஸ்ரீ ராம்மோகன் காம்ப்ளெக்ஸ்,
சத்தி ரோடு, **கோயம்புத்தூர்** 641 012.
தொலைபேசி: 448576

127, மேக்கர் சேம்பர்ஸ் - VI, நரிமன்பாயிண்ட்,
**பம்பாய்** - 400 021, தொலைபேசி: 2833377,
2872631 ஃபேக்ஸ் எண்: 2835408

பதிவு அலுவலகம்: AB/4, சப்தர்ஜங் என்க்ளேவ்
மார்க்கெட், **புது டெல்லி** 100 029.
தொலைபேசி: 601045, 6872102
ஃபேக்ஸ் எண் : 6876950.

**கோவை வாசகர்களுக்கு ஓர் நற்செய்தி!!**

SRFF நிறுவனத்தில் முதலீட்டுக்கான வழிவகைகள் மற்றும் சேவைகளின் சிறப்பு
அம்சங்கள் பற்றி மேலும் விவரம் தெரிந்து கொள்ள, கோயம்புத்தூரில் கீழ்க்காணும் முகவரியில் ஜூலை மாதம் 7, 8, 9 ஆகிய தேதிகளில் நடைபெறும் முதலீட்டுச் சந்தைக்கு வருகை தாருங்கள். எங்கள் ஸ்டால் எண் 8-க்கு வருகை தருபவர்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருக்கிறது.

இன்வெஸ்ட்மெண்ட் ஃபேர்,
தேவிபால் மோஹன்லால் பாக்ப்பனா ஆடிட்டோரியம்,
ராஜஸ்தானி சங், ஸ்டால் எண் 8.
579, D.B. ரோடு,
R.S. புரம், கோயம்புத்தூர் - 641 002.

WW/SRFF/024/94

பிக்சட் டெபாசிட்டுகள் பற்றிய சட்டபூர்வமான விளம்பரம் 28/8/93 தேதியிட்ட எக்கனாமிக் டைம்ஸ் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளது

**சென்னைக் கிளை ஞாயிற்றுக் கிழமைகளிலும் திறந்திருக்கும்.**

## 85. சீதை மகிழ்ந்தாள்

பயங்கர வானர சேனை லங்கைக் கடியில் பூமி அதிர இறங்கி விட்டது. ஒரு பெரிய வனத்தில் சுகமாகத் தங்கிற்று. யுத்த ஆயத்தமான லங்கா நகரத்திலிருந்தும் ராக்ஷசர்களுடைய கோஷம் கிளம்பிற்று. சங்கம், பேரிகை, துந்துபி முதலிய யுத்த வாத்தியங்களின் நாதம் கேட்டதும் வானரர்களுடைய உற்சாகம் இன்னும் அதிகமாயிற்று. ராமசந்திரன் சேனையை அணிவகுத்து யார் யார் எந்த எந்த ஸ்தானத்தில் இருக்க வேண்டும் என்று நிர்ணயித்துச் சொன்னபடி சேனை அணி வகுக்கப்பட்டு நின்றது.

லங்கையைப் பார்த்து, "ஆஹா! லக்ஷ்மணா! இந்த நகரத்தின் அழகைப் பார்த்தாயா?" என்றான் ராமன்.

லங்கையைக் கண்டதும் ராமனுடைய உள்ளம் சீதையிருந்த இடம் சென்றது. தானும் படையும் வந்தது இப்போது அவளுக்குத் தெரிந்திருக்குமல்லவா, தைரியம் அடைந்திருப்பாளல்லவா, என்றெல்லாம் எண்ணினான். ஆயினும் அதைப் பற்றி ஒன்றும் பேசாமல் சேனையை அணிவகுக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தான்.

சுகன் என்ற ஒரு ராக்ஷஸ சாரன் ராவணனிடம் சென்று, "தாங்கள் சொல்லியனுப்பியபடி என் காரியத்தைச் செய்தேன். ஆனால் ஒன்றும் பயனில்லாமல் போய் விட்டது. என்னைத் துன்பப் படுத்தித் திருப்பியனுப்பி விட்டார்கள். விராதன், கபந்தன், கரன் முதலியவர்களை விளையாட்டாகக் கொன்ற ராமன், சுக்ரீவனுடைய சேனையுடன் சீதையைச் சிறை வைத்திருக்கும் இடத்தை அறிந்து கொண்டு லங்கையை அடைந்து விட்டான். கரடிகளும் வானரங்களும் கடலைத் தாண்டி வந்து யுத்தத்துக்குத் தயாராய் லங்கைக்கு முன் நிற்கிறார்கள். தரை காணாமல் சேனை நின்றுவிட்டது. இனிப் பேச்சில் ஒன்றும் பிரயோசனமில்லை. அவர்களுக்கு நம் பேரில் உண்டாயிருக்கும் துவேஷம் யுத்தத்தினால்தான் தீர வேண்டும். வேறு வழியில்லை. மன்னனே! யோசனை செய்து என்ன செய்ய வேண்டியதோ அதைச் செய்வீராக."

இவ்வாறு சொல்லிவிட்டு முடிவில் மெதுவாக, "சீதையைத் திருப்பித் தந்து விட்டால் பிழைக்கலாம்" என்று சொன்னான்!

ராவணனுக்குக் கோபம் பொங்கிற்று. "என்ன சொன்னாய்? சீதையைத் திருப்பித் தருவது என்கிற பேச்சு யாரும் என்னிடம் பேச வேண்டாம். என்னுடைய சக்தியை அறியாமல் இந்தப் பேச்சுப் பேசுகிறீர்கள். தேவ தானவ கந்தர்வ யக்ஷர்கள் யார் வந்தாலும் என்னால் வதம் செய்யப்படுவார்கள். இந்திரனே வந்தாலும் சரி, யமனே வந்தாலும் சரி, என் பாணங்களால் எரிக்கப் படுவார்கள். பார், இந்த அற்ப ராமனும் அவனுடைய சேனையும் எப்படி துவம்சம் ஆகப் போகிறது!" என்றான்.

ராவணன் உண்மையில் அவ்வாறே நம்பினான். தன்னுடைய பூர்வ சரித்திரத்தை எண்ணி எண்ணி அடைந்திருந்த கர்வத்தினால் புத்தியிழந்து மூர்க்கனாகிப் போய் விட்டான்.

பிறகு இரண்டு அமைச்சர்களை அழைத்து வரச் சொல்லி அவர்களுக்கு உத்தரவிட்டான். "லங்கைக்குச் சேது கட்டி விட்டு, பெருஞ் சேனை வந்து இறங்கியதாகச் சாரர்கள் சொல்லுகிறார்கள். இது ஆச்சரியமாக இருக்கிறது. ஆயினும் காரியம் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நீங்கள் சென்று சத்துரு சைன்யத்தை நன்றாகப் பார்த்து எனக்கு அவர்கள் பலத்தின் விவரத்தைச் சொல்ல வேண்டும்!" என்று சொல்லி அனுப்பினான்.

அப்படியே அவர்களும் வானர வடிவம் தரித்து வானர சைன்யத்திற்குள் பிரவேசித்து, சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். விபீஷணன் இவர்களுடைய மாறு வேஷத்தைக் கண்டு கொண்டு அவர்களைப் பிடித்து ராமன் முன் கொண்டு போய் நிறுத்தினான்.

"சுவாமி! நாங்கள் தூதர்கள். எங்களுடைய அரசனால் அனுப்பப்பட்டோம். எங்களை விட்டுவிடுங்கள்" என்றார்கள்.

ராமன் சொன்னான் : "இவர்களுக்கு நம்முடைய சேனையைக் காட்டி, எல்லாம் பார்த்துப் போகச் சொல்லுங்கள். இவர்களை விட்டு விடுங்கள்! ஏ, ராக்ஷச தூதர்களே! நீங்கள் திரும்பிச் சென்று ராவணனுக்குச் சொல்லுங்கள். 'எந்த பலத்தை நம்பி நீ சீதையைத் தூக்கி வந்தாயோ

அந்த பலம் இன்று சோதனைக்கு உள்ளாகும். உன்னுடைய கோட்டையும் நகரமும் உன்னுடைய சேனையும் நாளையே அழிவதைப் பார்ப்பாய்! நாளைக் காலையில் ராமனுடைய பாணங்கள் உன்மேல் பாயும்.' இப்படி உங்கள் அரசனுக்குச் சொல்லுவீர்களாக!''

ராமன் சொன்னதைக் கேட்ட ராக்ஷச தூதர்களும் "அப்படியே!" என்றார்கள். "உமக்கு ஜெயமாகுக!" என்று தங்களையும் அறியாமல் அவர்களின் வாயினின்று எப்படியோ வழக்கத்தின் வசமாக வெளி வந்தது. இது ஒரு நல்ல நிமித்தமாக எல்லாரும் கருதினார்கள்.

ராவணனிடம் அவர்கள் சென்று, "சுவாமி! விபீஷணனால் நாம் கண்டு பிடிக்கப்பட்டோம். ஆனால், ராமன் எங்களைக் கொல்லாமல் விட்டு விட்டான். அரசனே! நம்முடைய பகைவர்கள் ஒரே




உறுதியாக இருக்கிறார்கள். ராமனும் லக்ஷ்மணனும் வாலி தம்பியாகிய வானர ராஜனும் விபீஷணனும் ஒரே மனமாக இருக்கிறார்கள். இவர்களால் நடத்தப்பட்ட இந்த சேனையை நாம் ஜெயிப்பது கஷ்டம். தசரதன் மகன் ராமனைப் பார்த்தோம். அவன் ஒருவனே போதும், நம்முடைய நகரத்தையும் சேனையையும் அழிக்க. இவ்வாறு எங்களுக்குத் தோன்றுகிறது. வானர சேனையின் வீரத்தையும் யுத்தத்துக்கு அவர்கள் ஆத்திரம் கொண்டிருப்பதையும் கண்டோம். இவர்களை விரோதிப்பது நல்லதல்ல. உடனே சீதையை ராமனிடம் ஒப்புவித்து விடுவது நல்லதாகும். யோசியுங்கள்!'' என்றார்கள்.

தங்களுடைய அரசனுடைய க்ஷேம நலத்தை உத்தேசித்துத் தூது சென்ற மந்திரிகள் இப்படிச் சொன்னார்கள். ராவணனுக்கோ இப்போது கோபம் தாங்க முடியாமற் போயிற்று.

"உலகமெல்லாம் எனக்கு விரோதமாக நின்றாலும் அதற்காக நான் பயப்பட மாட்டேன். தேவ கந்தர்வ தானவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து வந்து என்னை எதிர்த்தாலும் நான் சீதையைத் திருப்பித் தர மாட்டேன். தூது சென்ற நீங்கள் பகைவர்களால் அடிபட்டுப் பயந்து போய் இப்படிச் சொல்லுகிறீர்கள். கோழைகாள், யார் வந்து என்னை எதிர்த்து நிற்க முடியும்? எந்தப் பகைவன் என்னை ஜெயிக்க முடியும்?''

இப்படிச் சொல்லி விட்டுத் தானே அரண்மனை மாளிகையின் மேல் ஏறிச் சென்று சத்துரு பலத்தை நேரில் பார்த்தான். பிறகு மந்திரிகளோடு நீண்ட நேரம் பேசினான். சத்துரு சைன்யத்திலுள்ள வீரர்கள் யார், யார் என்பதையெல்லாம் தூது சென்று திரும்பியவர்களை விசாரித்தான்.

அவர்களும் ஒவ்வொரு வானர வீரனைப் பற்றியும் அவன் கொண்டு வந்திருக்கும் படையைப் பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். பூ மண்டலத்தில் பலவேறு வனங்கள், மலைகள், நதிப் பிரதேசங்களிலிருந்து வந்து கூடியிருக்கும் அந்தப் பெரிய வானர, கரடிச் சேனையின் பலத்தை எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்குள்ள தேக பலமும் வீரியமும், அவர்கள் ராமனிடத்தில் வைத்திருக்கும் அசையாத பக்தியும், அவர்கள் அனைவருக்குள்ளும் இருக்கும் ஒற்றுமையும், ராக்ஷசர்களை வதம் செய்ய வேண்டும் என்கிற ஆத்திரமும் எல்லாம் மந்திரி ஸாரணனால் சொல்லப்பட்டது. வானர சேனைக்குள் புகுந்த

போது ஸாரணன் கூடச் சென்ற மற்றொரு மந்திரியும் ராவணனுக்கு வானர வீரர்களைப் பற்றி விசேஷமாகச் சொன்னான்.

''அதோ பார்! அவன் தான் ராமச்சந்திரன்! அதோ பார்! அவன் பக்கத்தில் லக்ஷ்மணன். நீதி சாஸ்திரம், யுத்த சாஸ்திரம் அனைத்தும் அறிந்தவன். இவன் ராமனுக்கு நடமாடும் இரண்டாவது உயிரும் வலது கையுமாவான். அதோ பார்! அவன் பக்கத்தில் வாலியினுடைய மாலையை அணிந்து கொண்டிருக்கிற சுக்ரீவனை. வாலிக்குச் சம வீரன். அதோ பார்! அவன் பக்கத்தில் உன் தம்பி விபீஷணன். இவர்களை வெல்வது சுலபமல்ல. வெற்றிக்கு வேண்டிய முயற்சிகளையெல்லாம் யோசித்துச் சரியாகச் செய்வீராக!'' என்றான்.

பகைவனுடைய பலத்தைப் புகழ்ந்து பேசிய மந்திரிகளின் பேரில் ராவணனுக்குக் கோபம் மேலும் மேலும் பொங்கிற்று. மூர்க்கனுடைய குணம் இது. உண்மையைச் சொல்லும் தூதர்கள் பேரிலும் க்ஷேமத்தைக் கோரிப் பேசும் மந்திரிகளின் பேரிலும் புத்திசாலியான அரசன் கோபிக்க மாட்டான். ஆனால் ராவணனுடைய மதி இப்போது கலங்கிப் போயிருந்தது! அவனுக்கு இப்போது உண்மையும் பிடிக்கவில்லை, ஹிதமான உபதேசமும் பிடிக்கவில்லை.

ஏதோ யோசனை செய்தான். தன்னுடைய மனப் போக்கை வைத்து ராமனுடைய குணத்தை அளந்தான். இதுதானே உலக இயற்கை? சீதை தனக்கு எப்படியாவது உடன் பட்டுவிட்டால் ராமன் அவமானமடைந்து மனமுடைந்து திரும்பி விடுவான் என்பது அவன் எண்ணம். ஆனபடியால் இப்போது இன்னொரு முயற்சி செய்து அவளை எப்படியாவது உடன் படச் செய்ய வேண்டும் என்று தான் அறிந்த யுக்தி முறையில் தீர்மானித்தான். இதற்காக ஒரு மாயக்கார அரக்கனுடைய உதவியை நாடினான்.

''மின்னல் நாக்கனே! உனக்கு எல்லா மாய வித்தையும் தெரியுமல்லவா? நான் உனக்குச் சொல்லியனுப்புவேன், அப்போது நீ வந்து சீதையின் முன் அவளுடைய புருஷன் ராமனுடைய தலையைப் போல் ஒன்று செய்து அதைக் கொண்டு வந்து வைக்க வேண்டும்'' என்று சொன்னான். அந்த மாய வித்தைக்காரனும் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு

## அருள்வாக்கு

**நல்ல ஸத் விஷயங்களில் பிடிமானம், படிப்பு, பயிற்சி, பக்தி, பூஜை, த்யானம் உள்ளவர்களைத் தவிர மற்ற பெரும்பாலாரின் மனஸு கெட்டதுகளில் போகாமல் தடுப்பதற்குச் சரீர உழைப்புதான் ஸாதனமாகிறது. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏதோ எழுதுகிறோம், யோசனை பண்ணுகிறோமென்றால் அப்போதும் மனஸ் அது பாட்டுக்கு அவ்வப்போது இதை விட்டுவிட்டு ஓடிக் கொண்டுதானிருக்கும். அதுவே சரீரத்தால் கார்யம் செய்கிறோமென்றால் அப்போது அப்படிப்பட்ட கார்யத்திலேயே மனஸ் அதிகம் ஈடுபட்டு**

தயாரானான்.

அதன் மேல் ராவணன் அசோகவனம் சென்று மறுபடி ஜானகியைக் கண்டு பலவாறு சொல்லி ஏமாற்றி, ''உன் புருஷனும் அவன் சேனையும் ஹதம் செய்யப்பட்டார்கள். என் வீரர்கள் கடல் தாண்டிச் சென்று, ராமனும் அவன் வானர சேனையும் களைப்படைந்து தூங்கிக் கொண்டிருந்த சமயத்தில் திடீர் என்று தாக்கி ராமன் உள்பட எல்லோரையும் கொன்று விட்டார்கள். சேனை சிதறி ஓடிப் போயிற்று. உன் புருஷன் ராமனுடைய தலையை என்னுடைய வீரன் எனக்குக் காண்பிக்கக் கொண்டு வந்திருக்கிறான். இன்னும் ஏன் பிடிவாதம் செய்கிறாய்? என் அந்தப் புரத்துக்குத் தலைவியாகிச் சுகமாக இருப்பாயாக. மூர்க்கம் செய்யாதே! லங்கைக்கு அரசி ஆவாய். நான் சொல்வதைக் கேள்!'' என்று சொல்லி ஒரு அரக்கியை அழைத்து, ''போய், வித்யுஜ்ஜிஹ்வனை வரச் சொல்!'' என்றான்.

அந்த மந்திரவாதி அரக்கனும் ராமனுடைய தலையைப் போலவே இருந்த ஒரு மாய சிருஷ்டியைச் சீதையின் முன்னிலையில் வைத்தான்.

சீதை பார்த்துத் திடுக்கிட்டாள். தன் கதி இப்படியாயிற்றே என்று பிரலாபிக்க

விடுகிறது. அதனால் கண்ட கண்ட நினைப்புக்களுக்கு ஓடாமலிருக்கிறது. இது 'நெகடிவ்'தான் என்று ஒப்புக் கொள்கிறேன். அதாவது, சரீர உழைப்பால் சித்தம் கெட்டதில் போகவில்லையே தவிர, நல்லதில் ஈடுபட்டு உத்தம அநுபவங்களைப் 'பாஸிடிவ்' ஆகப் பெறவில்லைதான். ஆனால் முதலில் இந்த நெகடிவ் ஸ்டெப்பில் அடி வைத்துத்தான் பாஸிடிவுக்குப் போயாக வேண்டியிருக்கிறது. ஆசாரியாள் அதனால்தான் முதலில் கர்மாநுஷ்டானம், அப்புறம் இதனால் ஏற்படும் சித்தசுத்தியினால் மனஸ் உத்தமமாகவே போகிற பக்தி, அதற்கப்புறம் மனஸே போய்விடுகிற ஞானம் என்று படிவரிசை போட்டுக் கொடுத்தார்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

லானாள்.

இதற்கிடையில் ராமனுடைய சேனை லங்கையை நெருங்கி விட்டபடியால் மந்திரிகளும் சேனாபதிகளும் அவசரமாக வந்து ராவணனைப் பார்க்க அனுமதி கேட்டுச் சொல்லியனுப்பினார்கள். ராவணன் உடனே சீதையை விட்டு விட்டு சபைக்குப் போக வேண்டியதாயிற்று.

ராவணனுடைய இருப்பு அந்த மாயத்தில் இன்றியமையாத ஓர் அம்சம். அவன் அந்த இடம் விட்டுப் போனதும் மாயா உருவம் தானாகவே கரைந்து போயிற்று. ராமனுடைய தலை என்று காட்டப்பட்ட பொய்த் தலை புகை போல் மறைந்து போய் விட்டது!

விபீஷணனுடைய மனைவியான ஸரமை என்பவள் சீதைக்குத் தோழியாக இருந்து வந்தவள், ராவணன் செய்த மாய வித்தையைச் சீதைக்கு விளக்கிச் சீதைக்கு ஆறுதல் தந்தாள்.

"ராமனை யாரும் கொல்லவில்லை. அவனும் அவனுடைய பெரும்படையும் லங்கை வந்து சேர்ந்து விட்டது. கடலைத் தாண்ட அற்புதமாக ஒரு சேது கட்டி விட்டு அதன்மேல் மற்றொரு கடலைப் போன்ற பெரும் வானர சேனை வந்து இறங்கி விட்டது. ராக்ஷசர்கள் எல்லோரும் திகிலடைந்திருக்கிறார்கள். ராவணன் உன்னை மாய வித்தையால் ஏமாற்றப் பார்க்கிறான்" என்று சீதைக்கு உண்மையைச் சொன்னாள்.

ஸரமை சீதைக்கு இன்னும் சில விஷயங்களைச் சொன்னாள் :

"ராவணனுடைய மந்திரிகள் பலர் அவனுடைய க்ஷேமத்தை விரும்பி 'சீதையை ராமனிடம் ஒப்புவித்து விடு, அழியாமல் தப்பலாம்' என்று சொன்னார்கள். எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. 'யுத்தத்திலாவது உயிரை விடுவேன், ராமனிடம் நான் வணங்கி நிற்க மாட்டேன். சீதையைத் திருப்பித் தந்து சமாதானம் செய்து கொள்ளமாட்டேன்' என்று ராவணன் தீர்மானமாகச் சொல்லி விட்டான். அம்மையே! உனக்கு ஒரு அபாயமுமில்லை. ராமன் வெல்வான். இந்தக் கொடியவன் மாள்வான்" என்றாள்.

இப்படி ஸரமை சொன்ன சமயத்தில் திடீர் என்று வானர சேனையில் பேரிகைகளும் சங்கங்களும் ஒலிக்கும் சத்தம் கிளம்பிற்று.

ராவணன் அழிந்தான் என்று சீதை நிச்சயம் செய்து கொண்டு மகிழ்ந்தாள். லங்கையில் அதே சமயம் அந்தப் பெருஞ் சத்தத்தைக் கேட்ட அரக்கர்கள் பயத்தால் நடுங்கினார்கள்.

(தொடரும்)



# மல்லி மணம் பரப்பிய எல்.வி. பிரசாத்!

'ஏக் தூஜே கே லியே' படப்பிடிப்பின் போது, ரொம்ப உயரத்தில், கஷ்டப்பட்டு பாலசந்தரும் காமிரா மேனும் ஏறினார்களாம். ஏறிய பிறகு கொஞ்சம் திரும்பிப் பார்த்தால், பிரசாத் சார்! "என்ன சார், எதுக்கு இவ்வளவு கஷ்டப்பட்டு நீங்க மேல ஏறி வந்து..." என்று பாலசந்தர் சொல்ல, "நீங்க எப்படி படமாக்கறீங்க என்று பார்க்கணும். அதுக்காகத்தான் மேல ஏறி வந்தேன்!" என்றார் பிரசாத். பாலசந்தரே சொன்னது இது.

●● தாசரி நாராயண ராவ் இயக்கிக் கொண்டிருந்த ஒரு படத்தின் ஷூட்டிங்குக்கு பிரசாத் ஒரு நாள் வந்தார். ஒரு ஸ்டூலை இழுத்துப் போட்டுக் கொண்டு, லஞ்ச் வரை இருந்து பார்த்தார். லஞ்ச் பிரேக் முடிந்து, மறுபடி அதே ஸ்டூலில் வந்து உட்கார்ந்து கொண்டார். இவரே ஸ்டார்ட்-கட் எல்லாம் சொல்ல ஆரம்பித்து விடுவாரோ என்று தாசரிக்கே ரொம்ப தர்ம சங்கடமாகப் போய் விட்டது. 'நீங்க எதுக்கு சார் இப்படி சிரமப்படணும்?' என்று கேட்டும்விட்டார். "காமிராவில் நீங்கள் எப்படி ஷாட் வைக்கிறீர்கள் என்று பார்த்துத் தெரிந்து கொள்ளணும். அதுக்குத்தான் வந்தேன்!" என்றார் பிரசாத். பெரியவன், சின்னவன் என்றெல்லாம் பாராமல் கற்றுக் கொள்ளணும், கற்றுக் கொள்ளணும் என்ற அசாத்திய ஆர்வம், கடைசி வரையிலும்.

●● தாம் சினிமாவில் சம்பாதித்த அத்தனை செல்வத்தையும் லேபரட்டரி, வீடியோ ஸ்டூடியோ, ரிகார்டிங் தியேட்டர், அவுட்டோர் யூனிட் என்று சினிமாவிலேயே மறுபடி கொட்டினார். சென்னையில் சங்கர நேத்ராலயா, மதுரையில் அரவிந்த ஐ ஹாஸ்பிடல் போல, ஆந்திராவில் ஒரு நவீன கண் மருத்துவமனையைக் கட்டினார். அவர் நண்பர் கிருஷ்ணசாமி கேட்டார்: "நீங்கள் தான் சம்பாதித்ததை எல்லாம் சினிமாத் தொழிலிலேயே போடுவீர்களே, இப்படி ஒரு கண் ஆஸ்பத்திரி ஏன் கட்டினீர்கள்?" பிரசாத் சிரித்துக் கொண்டே சொன்னாராம்: "இதுவும் சினிமாவுக்கு வேண்டியதுதானே? கண் இல்லை என்றால் சினிமா பார்க்க முடியுமா?"

●● 'மிஸ்ஸியம்மா'வை நாங்கள் 'மிஸ் மேரி' என்று ஹிந்தியில் எடுத்த போது, பிரசாத் அவர்கள்தான் அதை டைரக்ட் செய்தார். அவரது திறமையைப் பார்த்து அசந்து போய்விட்டார் மீனாகுமாரி. "இத்தனை அருமையாக டைரக்ட் செய்கிறீர்களே, நீங்களே ஏன் இந்திப்படம் தயாரிக்கக் கூடாது? நான் முழு ஒத்துழைப்பும் தருகிறேன்!' என்று முன் வந்தார். உடனே, ராஜ்கபூர் - மீனாகுமாரி நடித்த 'சாரதா' படத்தைத் தயாரித்தார் பிரசாத்.

●● பம்பாய் டிரீம் லேண்டில் ஒரு சமயம் அவர் படம் பார்த்துக் கொண்டிருக்கும்போது அவர் கண்களிலிருந்து நீர் வழிந்தது. திடுக்கிட்டு மகன் ரமேஷ், "என்னப்பா, எதற்கு அழுகிறீர்கள்?" என்று கேட்டார். "இதே தியேட்டரில் நான் கேட் கீப்பராக வேலை பார்த்தது நினைவுக்கு வந்தது. அவ்வளவுதான்..." என்றார் பிரசாத், கண்களைத் துடைத்துக் கொண்டு. நூறு ரூபாயோடு பம்பாய் போய், அதிலும் 80 ரூபாயைத் தொலைத்து விட்டு, பம்பாயிலேயே ஓட்டிக் கொண்டு, கிருஷ்ணா டாக்கீஸ் (பிறகு 'ட்ரீம் லேண்ட்' ஆகியது) கேட் கீப்பராக வாழ்க்கையைத் தொடங்கி, அதே தியேட்டரில் உட்கார்ந்து தமது இந்திப் படத்தின் வெள்ளி விழா காட்சியையே பார்க்கும் பாக்கியம் எத்தனை பேருக்குக் கிடைக்கும்? அவரது வாழ்க்கையைப் புத்தகமாகக் கொண்டு வந்து, பிலிம் இன்ஸ்டிட்யூட் மாணவர்களுக்குப் படிக்கக் கொடுக்க வேண்டும்.

●● ஆழ் நிலை தியானத்தில் ஈடுபாடு கொண்டவர். ஒரு படத்தை மகரிஷி மகேஷ் யோகிக்கு சமர்ப்பணம் செய்தார்.

எண்பத்தேழு வயது இளைஞர் எல்.வி. பிரசாத். எனக்குத் தெரிந்து, சினிமாத் துறையில் இத்தனை சுறுசுறுப்புடன் தெளிவான பேச்சுடன், 'நீட்'டான, எப்போதும் மல்லிகைப்பூப் போன்ற சிரிப்புடன் இருக்கும் வேறு ஒருவரைப் பார்த்ததில்லை.

— ஏ.வி.எம். சரவணன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka